REGD. NO. M. 4392

துணிகள்
வெண்மையாக
சலவை செய்யப்
பட்டுள்ளன...

துணிகள்
பிரகாசமாக
சலவை செய்யப்
பட்டுள்ளன...

SUNLIGHT

# ஸன்லைட்
# சோப்பினில்
தான்

துணிகளை அடித்துத் துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும்
சலவை செய்கிறது!

S. 123-50 TM







டி. எஸ். ஆர். தைலங்களை ஆயிரக்கணக்கான மக்கள் விரும்பி உபயோகிப்பதற்குக் காரணம் அவைகளின் சிறந்த குணமே. ஆயுர்வேத சாஸ்திரீய முறைப்படி தயாரித்த சந்தனாதித் தைலம், அரைக்கீரை விதைத் தைலம் மூளைக்குக் குளிர்ச்சியையும் சருமத்திற்குப் பளபளப்பையும் கொடுக்கின்றன



**டி.எஸ்.ஆர். & கோ.**
**கும்பகோணம்**

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜன்டு:
சுராஜ் ஏஜன்ஸீஸ்
157, வால்டேக்ஸ்ரோடு, ராயப்பேட்டை, சென்னை

கோவை, பாலக்காடு அன் ஜில்லாக்கு சோல் ஏஜன்டுகள்:
B. பாலபட்டாபி செட்டியார்
246, வைசியாள் தெரு, கோயமுத்தூர்

வட ஆற்காடு ஜில்லாவுக்கு:
சேகர்ஸ், திருப்பத்தூர் (N. A.)

---

"கல்கி" ஆசிரியர் எழுதிய
முப்பெரு நவீனங்கள்

●

# சிவகாமியின் சபதம்

பரிசுப் பதிப்பு ரூ. 15
மலிவுப் பதிப்பு ரூ. 9

●

# பார்த்திபன் கனவு

தமிழ் நாட்டுச் சரித்திரத்தின் மகோன்னத காலத்தை இவ்விரு நவீனங்களும் அற்புதமாக விளக்குகின்றன

விலை ரூ. 6-8-0

●

# சோலைமலை இளவரசி

1942-ல் நடந்த இந்திய சுதந்திரப் புரட்சியை அடிப்படையாக வைத்து முற்றிலும் புதிய முறையில் எழுதப்பட்டது

விலை ரூ. 3-8-0

(தயார் செய்ய பிரத்தியேகம்)

●

கிடைக்குமிடம்

**கல்கி காரியாலயம்**

மீஞ்பாக்கம் :: சென்னை

# கல்கி










ALKI பிப்ரவரி 19, 1950 4 அணா

Edited, Printed and Published by R Krishnamurthy at the "Kalki" Press 116-119. Sladens Gardens. Poonamallee High Road, Kilpauk, Madras




# லிப்டன்ஸ்

## என்றால்

# சிறந்த டீ

# பழைய நாணய மதிப்புக் குறைவுக்கு முன் இருந்த விலையிலேயே!



கைவசம் ஸ்டாக் உள்ளவரை உலகப் பிரசித்தி பெற்ற கீழ்க் கண்ட இரண்டு ரக கடிகாரங்களையும் நாணய மதிப்புக் குறைவுக்கு முன் இருந்த விலைக்கே கொடுப்பதாக பேவர் லூபா கம்பெனியார் மகிழ்ச்சியுடன் அறிவிக்கிறார்கள்.






No. 7393. 10''' 16 ஜுவல், தட்டை, ஸ்டேயின்லெஸ் ஸ்டீல் கேஸ், வெண்ணிற வெள்ளி டயல், அராபிக் எண்கள் (படத்தில் உள்ளபடி)

ரு. 244/-

No. 7397. மேலே உள்ளது போல ஆனால் 18 காரட் தங்க கேஸில்

ரு. 548/-




பேவர் லூபா & கம்பெனி லிமிடெட் - பம்பாய் & கல்கத்தா

தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். கொழும்பில் ஜப்பான் குண்டு போட்டபொழுதுதான் கொழும்பு நகரசபை ஒரு முனிசிபாலிட்டியாக மாறி முதலாவது மேயராக காலஞ்சென்ற ஸர் ரத்ன ஜோதி சரவணமுத்து தேர்ந்தெடுக்கப் பட்டார். அதன் பின் இப்போதுதான் மற்றொரு தமிழர் மேயர் பதவியைப் பெற்றிருக்கிறார். புதிய மேயர் டாக்டர் குமாரன் ரத்னம் இந்தியர்களிடம் அனுதாபம் உள்ளவர். முற்போக்கான அபிப்பிராயம் கொண்டவர். இலங்கையின் பிரசித்திபெற்ற வைத்தியக் குடும்பத்தில் பிறந்தவர். இடது சாரிக் கட்சியின் சம்பூரண ஆதரவினால் அவர் மேயராகவும் ஜனாப் அபு பக்கர் உதவி மேயராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். கொழும்புக்கு இடது சாரிக் கட்சி மேயர் தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பது நகரத்தின் சரித்திரத்தில் இதுவே முதல் முறையாகும்.

## அதிர்ஷ்டம் மங்கவில்லை!

இலங்கையின் தேசியக் கொடியைத் தீர்மானிப்பதற்காக கனம் மந்திரி சேனநாயகா இரண்டு வருடங்களுக்கு முன்னால் ஸ்தல ஸ்தாபன சுகாதார மந்திரி ஸ்ரீ பண்டார நாயகா தலைமையில் ஒரு கமிட்டியை நியமித்திருந்தார். அந்தக் கமிட்டியில் நான்கு சிங்களவர்களும் இரண்டு தமிழர்களும் ஒரு முஸ்லீமும் அங்கத்தினர்களாயிருந்தனர். கமிட்டி பல கூட்டங்களை நடத்திப் பேசியும் ஏக மனதாக ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை. காரணம் சில சிங்களப் பிரதிநிதிகள் பொதுவாகச் சிங்களவர்களின் கொடியென்று கருதப்படும் சிங்கக் கொடியையே தேசியக் கொடியாக்க வேண்டுமென்று வற்புறுத்தினார்களாம். ஆனால் தமிழ்ப் பிரதிநிதிகளோ சிங்கக் கொடியில் சிறுபான்மையோர்களைக் குறிக்க சில மாறுதல்களைச் செய்ய வேண்டுமென்றார்களாம். எவ்வித மாறுதலைச் செய்யவேண்டுமென்பதிலும் அபிப்பிராய ஒற்றுமை ஏற்படவில்லை. இலங்கை சுதந்திரமடைந்து இரண்டு ஆண்டுகள் பூர்த்தியாகி மூன்றாவது சுதந்திர தினத்தைக் கொண்டாடுகையிலும் ஒரு தேசியக் கொடியை நிர்ணயிக்க முடியவில்லை. இலங்கை சுதந்திர மடைந்தும் இங்கு யூனியன் ஜாக் கொடியின் அதிர்ஷ்டம் இன்னும்கூட மங்காதது ஆச்சரியம்தானே!

## தொல்லை தீருமா?

இந்தியர் பிரஜா உரிமைச் சட்டத்தில் சில திருத்தங்களை சர்க்கார் செய்தால் இலங்கை இந்திய காங்கிரஸ் சர்க்காருடன் பூரணமாக ஒத்துழைக்கு மென்றும், இது சம்பந்தமாக பிரதம மந்திரி ஸ்ரீ சேனநாயகாவுடன் மேற்கொண்டு பேசும்படி ஹைகமிஷனர் ஸ்ரீ கிரிக்குப் பண்டித நேரு சொல்லிவிட்டுப் போயிருப்பதாயும் உள்ளூர் ஆங்கிலப் பத்திரிகை யொன்று பிரமாதமான தலைப்புகளுடன் ஒரு செய்தியைப் பிரசுரித்திருக்கிறது. அதைப் பற்றி இந்திய காங்கிரஸ் வட்டாரங்களில் விசாரித்தபொழுது பிரஜா உரிமைச் சட்டத்திலிருந்து ஆட்சேபகரமான அம்சங்களை நீக்கிவிட்டால் சர்க்காருடன் பூரணமாக ஒத்துழைக்க இந்தியர்கள் எப்பொழுதுமே தயாராயிருக்கிறார்களென்றும், இந்தியர்கள் இலங்கைப் பிரஜைகளாகி இலங்கையின் நல்வாழ்வுக்குச் சேவை புரியவே பிரஜா உரிமை கேட்கிறார்களே தவிர சர்க்காருடன் தகராறு செய்து கொண்டிருக்க வேண்டுமென்பது அவர்கள் இலட்சியமல்லவென்றும் கூறப்படுகிறது. பண்டித நேரு சமீபத்தில் இலங்கைக்கு விஜயம் செய்ததினால் இரு நாடுகளுக்குமிடையில் ஒரு புதிய நட்பு உணர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. இந்தியர்களுக்கு ஏற்பட்டுள்ள தொல்லைகள் தீர்ந்து மேற்படி நட்பு உணர்ச்சி நீடிக்குமா?

## தமிழைக் கண்டு அதிர்ச்சி!

ஒவ்வொரு ஜில்லாவிலும் அங்கு வசிக்கும் பெரும்பான்மை ஜனங்கள் பேசும் பாஷையிலேயே கோர்ட்டு நடவடிக்கைகளை நடத்தவேண்டுமென்று தேசிய பாஷா கமிட்டியின் சிபார்சுகள் கூறுகின்றன. அவற்றைத் தழுவி இலங்கை நீதிபரிபாலன மந்திரி சபை ஒரு திட்டம் வகுத்துள்ளது. அந்தத் திட்டத்தின்படி முதன்முதலாகக் கொழும்பு ஜில்லாவில் கணக்கெடுத்துப் பார்த்தபொழுது அங்கு பெரும்பாலோர் பேசும் பாஷை தமிழ் பாஷையாயிருப்பதைக் கண்டு அவர்கள் அதிர்ச்சியடைந்தார்களாம். எனினும் கொழும்பு நகரம் ஒரு சர்வதேச நகரம் போலிருப்பதை முன்னிட்டு அங்கு மட்டும் ஆங்கிலமே கோர்ட்டு பாஷையாயிருக்க வேண்டுமென்று உத்தரவிடப்படும் என்றும் மற்ற ஜில்லாக்களில் பெரும்பாலோர் பேசும் பாஷையே கோர்ட்டு பாஷையாயிருக்கும் என்றும் தெரிய வருகிறது. இதற்கிடையில் நீதிபதிகளில் பலர் வழக்காளிகளுடைய பாஷையில் விசாரணைகளை நடத்த சாத்தியமான வரையில் முயற்சி செய்து வருகிறார்கள்.

# சிங்களவர்களின் சங்கநாதம்

ரஜனி

கொழும்பு—பிப் 3.

இயற்கை வனப்பு மிகுந்த நூவெலியா நகரத்திலே நடைபெற்ற சர்வதேசத் தொழில் ஸ்தாபன மகாநாடு முடிவடைந்தது. வேறு எந்த சர்வதேச மகாநாட்டிலும் கிடைத்திராத ஒரு மகத்தான வெற்றி இந்த மகாநாட்டில் ஆசியாவுக்குக் கிடைத்ததைக் குறிப்பிட வேண்டும். உலக ஜனத்தொகையில் கிட்டத்தட்ட சரி பாதிப் பேர்கள் ஆசியா மக்களாகையினால், சர்வதேசத் தொழில் ஸ்தாபன சபையிலும் அதன் பல்வேறு கமிட்டிகளிலும் ஆசியா நாடுகளுக்கு அதிகப் பிரதிநிதித்துவம் அளிக்கவேண்டுமென்று ஒரு முக்கியமான தீர்மானத்தை ஜனாப் அல்வானு கொண்டு வந்தார். சர்வ தேசத் தொழில் ஸ்தாபனத்தின் முப்பத்திரண்டு கமிட்டிகளிலே இருபத்தாறு கமிட்டிகளில் ஆசியாவுக்குப் பிரதிநிதித்துவமே இல்லை என்பதை அவர் சுட்டிக் காட்டினார். இவ்விஷயத்தைப் பற்றி இந்திய அரசாங்கம் 1943, 1947-ம் ஆண்டுகளில் இரு முறை வற்புறுத்தியும் கூட இதர மேற்கத்திய நாடுகள் இந்தக் கோரிக்கைக்குச் செவி சாய்க்கவில்லையென்பதை இந்திய சர்க்கார் பிரதிநிதி ஸ்ரீ பிரஸாத் குறிப்பிட்டார். ஜனாப் அல்வானுவின் தீர்மானத்தை எல்லா ஐரோப்பியப் பிரதிநிதிகளும் ஏகமனதாக ஆதரித்து நிறைவேற்றினர். இதே போல ஆசியாவில் சர்வதேச ஸ்தாபனத்துக்கு ஒரே ஒரு தொழில் நுட்பப் பயிற்சி ஸ்தாபனமிருப்பது போதாதென்றும் இன்னும் சில ஸ்தாபனங்களை ஏற்படுத்த வேண்டியது அவசியம் என்றும் கொண்டு வரப்பட்ட மற்றொரு தீர்மானமும் எதிர்ப்பின்றி நிறைவேறியது.

மகாநாட்டுக்கு வந்திருந்த பிரதிநிதிகளை இலங்கை லேபர் இலாகா அதிகாரிகள் பல தோட்டங்களுக்கும் அழைத்துச் சென்று அங்குள்ள தொழிலாளர் நிலைமையைக் காட்டினர். மலாயாவைச் சேர்ந்த பிரதிநிதி ஸ்ரீ மேனன் இலங்கை அரசாங்கம் அழைத்த தோட்டத்துக்குப் போகாமல் தாமாக ஒரு தோட்டத்துக்குச் சென்று இந்தியத் தொழிலாளர் நிலைமையைப்பற்றி நேரில் விசாரித்தார். இந்தியத் தொழிலாளர் நிலைமை மிக மிக மோசமாயுள்ளதென்றும் அவர்களுடைய வீடுகள் மனிதர்கள் வசிக்கவே லாயக்கற்றவை என்றும் கூறினார். ஒரு பிரிட்டிஷ் பிரதிநிதி சர்க்கார் அழைத்துச் சென்று காட்டிய ஒரு தோட்டத்தைப் பார்த்துவிட்டு, "சிறந்த தோட்டமென்று சர்க்கார் பொறுக்கி யெடுத்துக் காட்டிய தோட்டத்தின் நிலைமையே இவ்வளவு கேவலமாயிருந்தால் மோசமான தோட்டத்தின் நிலைமை எப்படியிருக்குமென்பதை நாங்கள் சுலபமாக ஊகித்துக் கொள்ளலாம்!" என்றார்.

## குடியரசாக்குக!

இலங்கை ஒரு காமன்வெல்த் நாடாயிருப்பது கொந்தளிக்கும் இன்றைய உலக நிலைமையில் இலங்கையைப் பற்றித் தவறான அபிப்பிராயங்களை உண்டுபண்ணுவதாயிருக்கிறது என்றும், இலங்கையை உடனே ஒரு குடியரசாகப் பிரகடனப்படுத்த வேண்டும் என்றும் சிங்களவர்களின் பழமையான அரசியல் ஸ்தாபனமாகிய தேசிய காங்கிரஸ் ஒரு தீர்மானத்தை ஏகமனதாக நிறைவேற்றியிருக்கிறது. காங்கிரஸின் முப்பதாவது வருடாந்தர மகாநாட்டில் இந்தத் தீர்மானத்தைப் பேராசிரியர் பி.டி.எஸ். குலரத்ன பிரேரேபித்துப் பேசுகையில், பௌத்த தேசமாகிய இலங்கை தனது சமாதான இலட்சியங்களை உலகறியப் பிரகடனப் படுத்தினால் அதைவிடச் சிறந்த பாதுகாப்பு வேறொன்றுமில்லை யென்றும், இலங்கைக்கு ராணுவமும் கடற்படையும் விமானப்படையும் அவசியமேயில்லை யென்றும் கூறி பிரிட்டனுடன் செய்து கொண்டிருக்கும் ராணுவ உடன்படிக்கைகளை உதறித் தள்ள வேண்டும் என்றும் சங்கநாதம் செய்தார். இலங்கையின் சுதந்திரத்துக்கு ஒரு பேர்த்தளை போல ஒப்பிடப்பட்டிருக்கும் இந்த உடன்படிக்கைகளை உடனே ரத்து செய்ய வேண்டுமென்றும் மகாநாட்டில் இன்னொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## தமிழ் மேயர்

பல வருடங்களுக்குப் பிறகு கொழும்பு நகர மேயராக ஒரு தமிழர் இப்பொழுது

"வாராண்டி வேலன் தெருவில்......" என்று கிராமபோன் சத்தம் வந்தது.

எப்பொழுதுமே தோல்வியை ஒப்புக் கொள்ளாத என் நண்பர், "நான் என் தோல்வியை ஒப்புக் கொள்கிறேன், திரும்பலாம், ஸார்" என்றார்.

திரும்பினோம்.

குடிசையில் கிராமபோன் "ராதே, உனக்குக் கோபம் ஆகாதடி!" என்று பாடிக் கொண்டிருந்தது.

டீக் கடையில் "பிரே புல்புல் ஸோ சஹரா ஹை......" என்று பாடிக்கொண்டிருந்தது ஒலிபெருக்கி.

"ஆடுவோமே! பள்ளுப் பாடுவோமே!" —இது சினிமா தியேட்டர் ஒலிபெருக்கி.

"நாலேலோ......" இது அம்பா விலாஸ் ஒலிபெருக்கி.

"உன் கண் உன்னை ஏமாற்றினால்......" என்று பிரமாதமாகப் பாடியது சகுண சவுண்டு சர்விஸின் மிகவும் சுத்தமான ஒலிபெருக்கி.

என் வீடு வந்து சேர்ந்து விட்டோம். ஆனால் மேலண்டை வீட்டுப் பெண் தன் சங்கீத வாத்தியாருடன் சத்தப் போட்டி நடத்திக் கொண்டிருந்தாள்.

"ஏதேது! எப்படித்தான் ஜனங்கள் இத்தனையையும் சகித்துக் கொண்டிருக்கிறார்களோ?" என்றார் நண்பர்.

---

## கோவிலில்!



பாட்டி:—ஏண்டி கமலம்! அதற்குள்ளாகவா ஸ்வாமி தரிசனம் பண்ணி விட்டாய்! நான் எவ்வளவோ உன்னுடன் பேச வேண்டுமென்று வந்தேனே!

"நல்ல சங்கீதம், இப்படியெல்லாம் கேட்க ரொம்பவும் கொடுத்து வைத்திருக்க வேண்டும், ஸார்?" என்றேன் நான்.

நண்பர் சொன்னார்: "கலியுகம் தவிர மற்ற மூன்று யுகங்களிலும் ஈசுவரன் சதா மனிதர்களிடையே, அவதரித்துச் சஞ்சரிக்கிறானாம். கலிகாலத்தில் மட்டும்தான் கோயிலுக்குள் போய்க் குடி புகுந்துவிடுகிறானாம். இது நான் சொல்லவில்லை; பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்......"

நான் "கலியுகத்தில் ஈசுவரன் ஸ்தானத்தில்......?" என்று கேட்டேன்.

"ஈசுவரன் ஸ்தானத்தில் இப்போது சங்கீதம் நம்மை எல்லாம் விடாமல் துரத்துகிறது" என்றார் நண்பர்.

"உங்கள் ஊரில் இப்படி எல்லாம் சப்தம் இராது போலிருக்கிறது!" என்றேன் நான்.

அவர் டவுனுக்கு வெளியே, ஒன்றரை மைலுக்கப்பால் வசிப்பவர். அங்கே அவருடைய வீட்டைத் தவிர இரண்டொரு வீடுகளே யிருக்கின்றன.

"இராது! இராது!" என்றார் நண்பர்.

பக்கத்து வீட்டில் யுத்தம் நெருக்கடியான கட்டத்தை எட்டிக் கொண்டிருந்தது.

"நான் வரட்டுமா?" என்று கிளம்பினார் நண்பர்.

"சரி" என்றேன் நான்.

ஆனால் அவருடைய கடைசி 'இராதும்' பொய்யாகிவிட்டது. அன்றிரவு கோயிலில் ஒரு பெரிய கச்சேரி. அந்த இலவசக் கச்சேரி காது நிறைக்கும் இலவசமாகக் கிடைக்க வேண்டுமே என்று, அதை ஏற்பாடு செய்திருந்தவர்கள். அரை டஜன் ஒலி பெருக்கிகளுக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். கோபுரங்களிலும், அதற்கும் உயரமான வேறு இடங்களிலும் ஆறு ஒலிபெருக்கிகளின் "ஊமத்தம் பூ"க்களையும் பொருத்தி விட்டார்கள். நண்பரின் வீடென்ன, அதற்கப்பால் ஏழெட்டு மைல்கள் வரை, கேட்டிருக்கும் சங்கீதம்.

நண்பர் ஒரு வருஷம் சங்கீதம் கேட்பதில்லை என்று ஒரு ஆப்த நண்பரின் மறைவுக்காக வருந்திப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டு என்ன பயன்? இந்த ஒலி பெருக்கிகளின் வலைவீச்சுக்கு அகப்படாமல், அவர் அப்படி எங்கேதான் போய்விட முடியும்?

எங்களூரில் சங்கீதம் எப்படியோ, எனக்குச் சொல்லத் தெரியவில்லை. ஆனால் எந்த ஒலியையும் பெருக்கும் கலை மட்டும் பிரமாதமாகத்தான் வளர்ந்திருக்கிறது!

மாட்டார். "உமக்குச் சங்கீதம் கேட்கப் பிடிக்காதுன்னு தெரியும் ஐயா, தெரியும். சங்கீதக் கச்சேரி கேட்கப் பிடிக்கா விட்டாலும், பார்க்கலாம் வாரும்!" என்று அழைத்துப் போய்விடுவார்.

இப்படிப்பட்ட ஆசாமி ஒரு வருஷம் பூராவும் பாட்டுக் கேட்பதில்லை, பாட்டுக் கச்சேரிக்கும் போவதில்லை என்று முடிவு கட்டி விட்டதாகச் சொன்னால், எனக்கு ஆச்சரியமாகத்தான் இருந்தது.

"ஆமாம், நாராயணன் ஞாபகார்த்தமாக ஒரு வருஷம் பூராவும் சங்கீதமே கேட்பதில்லை என்று தீர்மானித்து விட்டேன். இதைவிட நான் செய்யக் கூடியது வேறு என்ன?" என்றார் நண்பர் மீண்டும்.

அவர் இதைச் சொல்லி வாய் மூடினாரோ இல்லையோ காதில் நுழைகிற மாதிரி ஒரு ஒலிபெருக்கி அலறத் தொடங்கிற்று: 'எண்ணியெண்ணிப் பார்க்க மனம்...' என்று.

"என்ன ஐயா அது?" என்றார் நண்பர்.

"கிழக்கே ஒரு வீட்டில் புதிசாக கருணா சவுண்டு சர்வீஸ் என்று ஒரு சவுண்டு சர்வீஸ் ஆரம்பித்திருக்கிறார்கள். அவர்களுடைய ஒலி பெருக்கிதான்; வேலையில்லாத சமயத்திலெல்லாம், அவர்கள் இடத்திலேயே ரிகார்டுகளை வைத்து ஒலி பெருக்கத் தொடங்கி விடுகிறார்கள்" என்றேன் நான்.

"வருஷம் பூராவும் வேலை கிடைக்கா விட்டால்......?"

"நம்ம பாடுதான் ஆபத்து!"

"இல்லாவிட்டால், நாம் அவர்களுடைய ஒலி பெருக்கியை வாடகைக்கு எடுத்துக் கொண்டு விடலாம்" என்றார் நண்பர்.

பிறகு தொடர்ந்து "வாரும், ஐயா, ஸ்டேஷன் பக்கம் போகலாம். இங்கே சத்தம் தாங்கலையே!" என்றார்.

"வழியில் காப்பியும் சாப்பிடலாம்" என்று கூறிக் கொண்டே நானும் அவருடன் கிளம்பினேன்.

போர்க்களத்தில் புகுந்த வீரர்கள் போல எதிர்த்து வந்த சத்தத்துடன் போராடிக் கொண்டுதான் தெருவில் நடக்க வேண்டியிருந்தது. நான் நல்ல சங்கீதமோ, கெட்ட சங்கீதமோ, காதருகில் வந்து ஒலித்தால் கூடக் காதில் வாங்காமல் இருந்து விடப் பழகியவன். நண்பர் எல்லாவற்றையும் கேட்டு விட்டுக் குறை கூறுபவர்.

எப்படியோ கருணா சவுண்டு சர்வீஸின் சத்தம் எட்டாத எல்லையை அடைந்து விட்டோம். அங்கே வேறு ஒரு ஒலிபரப்பி "வச்சேன்னு வச்சேத்தான் ......... வச்சேன்னு" என்று ஒலி பரப்பிக் கொண்டிருந்தது.

"அமர விலாஸின் புது முதலாளிக்கு இன்று அப்தபூர்த்தி" என்றேன் நான்.

"அப்த பூர்த்தியா?"

"முதலாளிக்குக் குழந்தை பிறந்து, அதற்கு இன்று ஆண்டு நிறைவாம். ஆகவே, அவர்கள் ஹோட்டலில் இன்று ஒலிபெருக்கி விசேஷ அம்சம்......" என்றேன்.

எப்படியோ அமரவிலாஸையும் தாண்டி விட்டோம், அந்த அமர கீதத்தையும் தப்பி!

அப்பால் இருந்தது சினிமா தியேட்டர். சினிமா தொடங்க வேண்டிய சமயம்.

"ஒரு நாள் ஒரு தாம்......" என்று அலறிக் கொண்டிருந்தது சினிமா தியேட்டர் ஒலிபெருக்கி.

"அடாடா!" என்று காதைப் பொத்திக் கொண்டே வேகமாக நடந்தார் நண்பர்.

"ஒரு வருஷம் சங்கீதமே கேட்கப்போவதில்லை என்றீர்களே! எப்படி அது முடியப் போகிறது உங்களால்?" என்றேன் நான்.

பாலத்தில் ஏறும்போது நண்பர் கேட்டார்: "இனிமேலும் இந்தச் சத்தம் நம்மைத் தொடாது, இல்லையா?" என்றார்.

"அதெப்படி நிச்சயமாகச் சொல்ல முடியும்?" என்றேன்.

பாலத்தின் இறக்கம் இறங்கிப் பத்தடி நடப்பதற்கு முன்னே நான் கேட்டது தான் சரி என்று ஏற்பட்டு விட்டது. மூலையில் தனியாக நின்ற ஒரு டீக்கடையிலிருந்து "அஞ்சுவயசினிலே, அறியாப் பருவத்திலே......" என்று அலறல் வந்துகொண்டிருந்தது.

சாதாரணமாகவே வேகமாக நடப்பவர் நண்பர். நடையும் ஓட்டமுமாக ரயில்வே பாதையை அடைந்த பிறகுதான் திரும்பிப் பார்த்தார். நான் இருபது கஜத்துக் கப்பால் வந்து கொண்டிருந்தேன். எனக்காகக் காத்திருந்தார்.

"ஒலிபெருக்கி எதுவும் ரயில்வே பாதைக் கப்பால் இராது, இல்லையா?" என்று என்னைக் கேட்டார்.

"இராது, இராது" என்று நிச்சயமாகச் சொன்னேன் நான்.

ஆனால் ரயில்வே பாதைக் கப்பால் இருபதடி நடந்திருக்க மாட்டோம்; பக்கத்திலிருந்த ஒரு குடிசையிலிருந்து, "தெருவில்

"அப்படியா?"

"பெரிய பெரிய வித்வான்கள் என்று ஒன்றுமே அறியாதவர்கள் எல்லாம் 'பாரேட்' பண்ணுகிற இந்த நாட்களில், அவன் உண்மையான சங்கீதத்துக்கே உறைவிடமாக இருந்தான், ஐயா" என்றார் நண்பர்.


போராடிக் கொண்டு......

"இந்தக் காலத்தைப் பற்றிப் பேசிக் குறைப்பட்டு என்ன பலன், ஸார்? நாம் அந்தக் காலமும் இல்லை; இந்தக் காலமும் இல்லை. இரண்டுக்கும் இடையில் விசுவாமித்திர சிருஷ்டியாகிய ஒரு திரிசங்கு காலத்தில் தோன்றி விட்டோம். அதுதான் நம் பிசகு" என்றேன் நான்.

"'இந்தக் காலத்தில் பாடுகிறேன், பாடுகிறேன் என்கிறார்கள் பலர்.—நல்ல பாட்டைக் கேட்கக் கூடத் தெம்பில்லாத மனிதர்கள்!' என்று சொல்வான். நல்ல சங்கீதம் தெரிந்தவர்கள்......"

நான் குறுக்கிட்டேன். "எந்தக் காலத்திலுமே தெரியாதவர்கள்தான் அதிகம், இல்லையா?"

"இருந்தாலும் கூட இந்த நாட்களில் நடப்பது போலக் கலைகளில் மெஜாரிட்டி ஆட்சி எந்தக் காலத்திலும் நடந்ததில்லை, ஐயா!" என்றார் நண்பர்.

என் நண்பரின் சுபாவம் எனக்குத் தெரியும். அவருடன் எப்படிப்பட்ட விவாதமும் நடத்துவது சிரமம். அவரும் தோல்வியை ஒப்புக் கொள்ளமாட்டார். நாம் தோற்று விட்டதாக ஒப்புக் கொண்டாலும் விடமாட்டார்—துரத்தித் துரத்தி அடிப்பார்.

சுருக்கமாக நான் "வாஸ்தவம்தான்!" என்று ஒப்புக் கொண்டேன். பிறகு "உங்கள் சகபாடி நாராயணன் எப்படி இறந்தார்? அவருக்கு என்ன உடம்பு?..." என்று கேட்டேன்.

"தெரியவில்லை. ஆனால், 'கடவுளின் அன்பைப் பெற்றவர்கள் சீக்கிரம் இறந்து விடுவார்கள்' என்று சொல்வார்கள். அது உண்மை என்று தான் படுகிறது."

"அப்படியானால் கடவுள் நம்மிடமும் அன்பு காட்டாதிருக்க வேண்டும் என்று பிரார்த்திப்போம்!" என்றேன்.

நண்பர் சொன்னார்: "நாராயணன் இறந்து விட்ட செய்தி என்னை ஸ்தம்பிக்கவே செய்து விட்டது. இதுவரை சாவு என்றால் நான் பயப்பட்டதில்லை. இப்போது......"

"வயசாகிறது என்கிற உணர்ச்சி சரியானது தான். ஆனால் அதைச் சாவுக்குப் பயம் என்று சொல்வது பொருத்தமில்லை."

"சாவுக்கு யாரையா பயப்படுகிறார்கள்? நாம் செய்ய விரும்புவதை எல்லாம் செய்து முடிக்காமல் போகிறோமே என்று ஒரு ஆதங்கம் சாவு என்கிற ஞாபகத்தில் நம் மனசில் விசுவரூபம் எடுக்கிறது."

"ஒன்றுமே செய்ய விரும்பாதவர்களும் உலகில் இருக்கத்தானே செய்கிறார்கள்? அவர்கள் மட்டும் சாவை வரவேற்கிறார்களா, என்ன?"

"நாராயணன் செத்துவிட்ட செய்தி காதில் விழுந்தவுடனே நான் ஒன்று தீர்மானித்தேன்" என்றார் நண்பர்.

"என்ன?"

"ஒரு வருஷம் பூராவும் சங்கீதம் கேட்பதில்லை என்று தீர்மானித்து விட்டேன்."

"அப்படியா?" என்று நான் ஆச்சரியத்துடன் கேட்டேன்.

அந்த நண்பர் சங்கீதத்தில் சற்று அதிகமாகவே ஈடுபாடுள்ளவர். யாருடைய சங்கீதமும் அவருக்குத் திருப்தியளிக்காது. ஆனால் அதற்காகக் கச்சேரிகளுக்குப் போகாமல் இருந்துவிடவும் மாட்டார். மட்டமான கச்சேரி, அரங்கேற்றபடிக் கச்சேரி, நடுத்தரமான கச்சேரி, உயர்ந்த கச்சேரி எதுவானாலும் கேட்கப் போய்விடுவார். "இவர்கள் எல்லாம் பாட்டுன்னு பாடறானே!" என்று சொல்லிக் கொண்டு திரும்புவார். சங்கீதக் கச்சேரி நாட்களில் நான் அவர் கண்ணில் பட்டு விட்டேனானால் ஆபத்துதான். 'நான் வர மாட்டேன்' என்று சொன்னால் விட



# சங்கீதப் போராட்டம்



**க. நா. சு.**

வழக்கமாக ஒரு பரபரப்புடனும் பதட்டத்துடனும் வருகிற நண்பர், அன்று மாலை அதிகப் பரபரப்புடனும் பதட்டத்துடனும் வந்து சேர்ந்தார்.

சாதாரணமாக அவருடைய பரபரப்புக்கும் பதட்டத்துக்கும் அர்த்தமே கிடையாது என்று எனக்குத் தெரியும். ஆனால் அன்று வழக்கத்துக்கு மாறாக அவர் முகத்திலேயே ஒரு விசேஷ பாவம் தெரிந்தது.

"என்ன ஐயா! இன்று ஏதாவது விசேஷம் உண்டோ?" என்று கேட்டேன்.

"விசேஷமா?" என்று கேட்டு நிறுத்தினார் நண்பர்.

"ஏதோ இருப்பது மாதிரித் தோன்றிற்று" என்றேன்.

"எனக்கெல்லாம் வயசாகிக் கொண்டிருக்கிறது என்பதுதான் விசேஷம்."

"ஓ! பிறந்த அன்றைக்கேதான் வயசாக ஆரம்பித்து விடுகிறதே! அதற்கு என்ன இப்போது?" என்றேன் நான்.

"என் சகபாடிகளில் ஒருவன் இறந்து விட்டான்" என்றார்.

"அப்படியா?" என்று அனுதாபம் தெரிவிக்கிற குரலில் கேட்டுவிட்டு, "இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் வயசு தெரியத் தோன்றுவது சகஜம்தான். ஆனால் இறந்தது யார்? எனக்கும் தெரிந்தவர்தானா?" என்றேன்.

"தெரிந்தவர்தான். என்னோடு இங்கு இரண்டு மூன்று தரம் வந்திருக்கிறார். போன தடவை வந்தபோது மூவரும் போய் ஒரு ஹோட்டலில் நல்ல காப்பியாகச் சாப்பிட்டோம்" என்றார் நண்பர்.

"யாரு? பெயர்...?"

"நாராயணன் என்று பேர் ......சங்கீத வித்வான்......"

"ஓ! அவர் இறந்துவிட்ட செய்தியைப் பத்திரிகையில் கூடப் பார்த்தேனே! ஆமாம்! நாற்பத்திரண்டு வயசு என்று போட்டிருந்தது" என்றேன்.

"எங்கள் இருவருக்கும் ஒரே வயசு என்பது மாத்திரம் இல்லை. நாங்கள் எல்லா விஷயங்களிலுமே சகபாடிகள். எங்களுக்கு விருப்பு வெறுப்பு எல்லாம் ஒரே மாதிரிதான். இரட்டையர்கள் என்று சொல்லும்படியாக இருப்போம், அந்த நாட்களில். அவனுடைய சிரமங்களை எல்லாம் அவன் என்னிடம் சொல்லுவான்; என்னுடைய சிரமங்களை எல்லாம் நான் அவனிடம் சொல்லுவேன். மனோபாவம், போக்கு, ஈடுபாடு எல்லாம் எங்கள் இருவருக்கும் ஒரே மாதிரி" என்றார்.

"புரிகிறது!" என்றேன் நான்.

"அந்த நாட்களில் எங்கள் இருவரையுமே அரைப் பைத்தியம் என்றுதான் எல்லோரும் சொல்வார்கள்."

"அப்படியா? அவரும் ஒரு தினுசான ஆசாமிதான் போலிருக்கு" என்றேன் நான்.

நண்பர் ஒரு விநாடி தயங்கி விட்டுச் சொன்னார்: "ஜீனியஸ் என்றாலே ஒரு தினுசாகத்தான் இருக்கும்."

"நீங்கள் ஒரு ஜீனியஸ், நான் ஒரு ஜீனியஸ்—இரண்டு பேருமே ஒரு தினுசாகத்தான் இருக்கிறோம். ஆனால் அதற்காக ஒரு தினுசாக இருப்பவர்கள் எல்லோரையும் நம்முடைய கோஷ்டியில் 'ஜீனியஸ்' என்று சேர்த்துக் கொண்டு விட்டால்......" என்று இழுத்தேன்.

"ஜீனியஸாவது ஐயா! சங்கீதம் என்றாலே அவன்தான் ஐயா!" என்றார் அவர், உற்சாகத்துடன்.

"சங்கீதத்தைப் பற்றி நீங்கள் எது சொன்னாலும் ஒப்புக் கொள்கிறேன். ஏனெனில் எனக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது!" என்றேன்.

"உங்களுக்கு மட்டுமா தெரியாது, அவனைப் பற்றி உலகத்துக்கே சரியாகத் தெரியாது. பாருங்களேன்—பத்திரிகைகளில் நாலு வரி எழுதி விட்டுவிட்டான். என்னைக் கேளுங்கள், சொல்லுகிறேன். அவனுடன் சங்கீதமே போய் விட்டதய்யா, போய்விட்டது!"



# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 283. கொல்ல எண்ணவில்லை!

வெற்றியைத் தவிர்த்து வேறு தெரியாதவன் ராவணன்.

அவன் வில்லை இழந்தான், வாளை இழந்தான். கடைசியாக முடியையும் இழந்தான்.

இதைவிட ராவணனுக்குக் கேவலம் வேறு என்ன வேண்டும்?

அறம்க டந்தவர்
  செயல்இ தென்(று) உலகெலாம்
    ஆர்ப் ப,—
நிறம்க ரிந்திட
  நிலம்விரல் கிளைத்திட
    நின் றான்;
இறங்கு கண்ணினன்
  எல்லழி முகத்(து)இரும்
    தலை யன்
வெறுங்கை நாற்றினன்,
  விழுதுடை ஆல்அன்ன
    மெய் யன்.

[அறம் கடந்தவர் செயல் இது என உலகெலாம் ஆர்ப்ப: தன்னந் தனியாய் நிராயுத பாணியாய் நின்ற ராவணனது நிலையைச் சகலரும் பார்த்துக் கொண்டார்கள். பாவத் தொழில் செய்கிறவர்களுடைய காரியம் இது தான்! என்று ஆரவாரம் செய்தார்கள்; நிறம் கரிந்திட: மேனியானது என்றுமில்லாத வெப்பத்துக்கு உள்ளாகித் தீய்ந்து விடுமோ என்று தோன்ற; நிலம் விரல் கிளைத்திட: செயல் எதுவும் செய்வதற்கு யோசனை ஒன்றும் தென்படாமல் திகைத்து நின்ற நிலையில், காலின் பெரு விரலால் தரையைக் கீறிக் கொண்டு நின்றான்; இறங்கு கண்ணினன்: மேல் நோக்கிப் பார்க்க முடியாமல் கண் தரையை நோக்கி அப்படியே நின்றது; (இறங்கு எல் அழி முகத்து) இரும் தலையன்: முகத்தில் உயிர் விளக்கம் யாதும் இல்லாதபடி தோன்றப் பெரிய தலையைத் தொங்க விட்டவனாய்—நிமிர்ந்து பார்க்க இயலாதவனாய்; வெறுங்கை நாற்றினன்: தன்னுடைய இரு கைகளும் வீரத்துக்கு அடையாளமான பல போலிக் கைகளும் எல்லாம் சேர்ந்து ஒன்றாய்ச் செயலற்றுத் தொங்கின;—அது எப்படியிருந்தது? விழுதுடை ஆல் அன்ன மெய்யன்: ஒரு பெரிய ஆலமரம் பெரிய பெரிய விழுதுகளைத் தொங்க விட்டுக் கொண்டிருந்தது போல் இருந்தது ராவணனது பெருத்த உடம்பு.]

* * *

சுற்றியிருந்து பார்த்தவர்கள் ராவணனது நிலையைக் கண்டு ஆரவாரித்தார்கள்—இந்த நிமிஷம் அவன் தலை போய்விடும் என்று எண்ணிய உற்சாகத்தில்.

ஆனால் ராமனுடைய எண்ணம் எப்படியிருந்தது?

நின்ற அந்நிலை
  நோக்கிய நெடுந்தகை,
    அவ னைக்
கொன்றல் உன்னிலன்,
  வெறுக்கைநின் றான்எனக்
    கொள் ளா,
இன்(று)அ விந்தது
  போலும்உன் தீமைஎன்(று)
    இசை யா,
ஒன்ற வந்தன
  வாசகம் இனையன
    உரைத் தான்.

[நின்ற அந்நிலை நோக்கிய நெடுந்தகை: நிராயுத பாணியாய் நின்ற ராவணனது நிலையைப் பார்த்த ராமன்; அவனைக் கொன்றல் உன்னிலன்: அவனைக் கொன்றுவிட வேண்டும் என்று எண்ணவில்லை; வெறுங்கை நின்றான் எனக் கொள்ளா: வில்லோ வாளோ ஒன்றும் இல்லாமல் வெறுங் கையோடு நிற்கிறான் என்பதை மனதிற் கொண்டவனாய்; இன்று அவிந்தது போலும் உன் தீமை: சரி, சரி, இன்று உன்னுடைய தீய செயலுக்கெல்லாம் முடிவு வந்துவிட்டது; என்று இசையா: என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டு; ஒன்ற வந்தன வாசகம் இனையன உரைத்தான்: சந்தர்ப்பத்துக்கு ஒத்ததான கீழ்க்கண்ட வார்த்தைகளை எடுத்துச் சொன்னான்.]

வார்த்தை எப்படி வருகிறது என்று அடுத்த இதழில் பார்க்கலாம்.

அப்பேர்ப்பட்ட மகா நியாயமான தேசத் தலைவருக்கு இந்த விஷயத்தில் அவ்வளவு கோபமும் ஆத்திரமும் ஏன் ஏற்பட்டன என்று யாரால் சொல்ல முடியும்?

ஸ்ரீ தாஸ் சிறைக்குள் ஆத்திரப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில், வெளியிலே அவருடைய ஸ்தானத்தை வகித்துவந்த ஸ்ரீ சியாமசுந்தர சக்கரவர்த்தி என்னும் வங்கத்தலைவர் ஸ்ரீ தாஸைப் பேட்டி காணச் சென்றார். அவரிடம் தேசபந்து தம் மனோ நிலையை வெளியிட்டார். தேசபந்துதாஸ் அச்சமயம் வங்க நாட்டின் முடிசூடா மன்னராக விளங்கியவர். அவருடைய கருத்தை ஆதரிப்பது தம் கடமையென்று ஸ்ரீ சியாமசுந்தர சக்கரவர்த்தி கருதினார். ஆகையால் பின்வரும் தந்தியை அவர் மகாத்மாவுக்குக் கொடுத்தார்.

கல்கத்தா
20–1–21

வங்காளத்தின் அபிப்பிராயம் வட்ட மேஜை மகாநாட்டின் மூலம் ஏற்படக்கூடிய சந்தர்ப்பத்தைக் கைப்பற்றவேண்டும் என்பதை ஆதரிக்கிறது. ஜனங்களின் சார்பாகப் 'போரை நிறுத்தி வைக்கிறோம்' என்று உறுதி கொடுக்க வேண்டியது நியாயமேயாகும். நீங்கள் கோரும் கைதிகளின் விடுதலையை மகாநாடு கூடுவதற்கு முன்னால் எதிர்பார்க்கலாம். உடனே பதில் தெரிவிக்கவும்.

சியாமசுந்தர்

இதே மாதிரி இதே தேதியில் பண்டித மாளவியாவும் மகாத்மாவுக்குத் தந்தி கொடுத்தார். "வட்ட மேஜை மகாநாடு பற்றிய விவரங்கள் முடிவானால் ஹர்த்தாலை வாபஸ் பெறவும் ஒத்துழையாமை நடவடிக்கைகளை நிறுத்திவைக்கவும் ஒப்புக் கொள்ளவேண்டும்; ஒப்புக் கொள்வதாக உங்கள் சம்மதத்தைத் தெரிவிக்க வேண்டும்" என்று கேட்டார்.

இதற்குள் கல்கத்தா வந்து சேர்ந்த ஜும்னாதாஸூம் குன்ஸ்ருவும் "மாளவியாவுக்கு நீங்கள் கொடுத்த தந்தியைப் பார்த்து எங்கள் இருதயம் உடைந்து போய்விட்டது! உங்களிடம் சம்பாஷித்ததிலிருந்து ராஜிப் பேச்சுக்கு நீங்கள் தயார் என்ற எண்ணத்துடன் திரும்பி வந்தோம். தயவு செய்து யோசியுங்கள்" என்று தந்தி அடித்தார்கள்.

மேற்கூறிய எல்லாத் தந்திகளுக்கும் ஏறக்குறைய ஒரே விதமாகவே மகாத்மா காந்தி பதில் அனுப்பினார்.

"வட்டமேஜை மகாநாட்டுக்கு நான் நிபந்தனையின்றி வாத்தயார். ஆனால் என்னிடத்திலும் நிபந்தனை எதுவும் கேட்கக் கூடாது. சர்க்காரின் அதிகார துஷ்பிரயோகம் நின்றால் இப்போது நடக்கும் தனிப்பட்ட சட்டமறுப்பு தானே நின்று போகும். வட்டமேஜை மகாநாட்டின் மூலம் காங்கிரஸ் கோரிக்கைகள் நிறைவேறினால் ஒத்துழையாமை இயக்கமும் நின்றுவிடும். மற்றப்படி ஒத்துழையாமை இயக்கத்தை நிறுத்தி வைப்பதாக இப்போது ஒப்புக் கொள்ள முடியாது. அப்படிக் கேட்பது நியாயமும் இல்லை."

மகாத்மாகாந்தியின் இந்தப் பிடிவாதம் மிதவாதிகளுக்குப் பெரும் ஏமாற்றத்தை அளித்தது. லார்ட் ரெடிங்குக்கு அது பெரும் ஏமாற்றமாகவே இருந்திருக்க வேண்டும்.

ஏன்? தேசபந்துதாஸ் முதலிய சில காங்கிரஸ் தலைவர்கள் கூட மகாத்மாவின் மீது மனஸ்தாபப் பட்டார்கள். "நல்ல சந்தர்ப்பத்தைக் காந்திஜி கைநழுவ விட்டு விட்டார்" என்று சொன்னார்கள்.

இதிலிருந்து பிற்காலத்தில் பல அரசியல் விளைவுகள் முளைத்து எழுந்தன.



வண்டிக்காரன்:—சாமி! நீங்கள் பாகவதர்தானே? ஒரே ஒரு உதவி செய்யுங்க, ஐயா!

பாகவதர்:—ஏன், என்ன உதவி செய்ய வேண்டும்?

வண்டிக்காரன்:—என் வண்டிக்குள் ஏறி உட்கார்ந்து ஒரு பாட்டுப் பாடினால் போதும்!

பாகவதர்:—எதற்காகப் பாட வேண்டும்?

வண்டிக்காரன்:-அப்பொழுதுதான் என் வண்டி மாடு மிரண்டு ஓட ஆரம்பிக்கும். பாடுகிறீர்களா?

சர்க்கார் தொண்டர் படைகளை ஆட்சேபிக்கவேண்டிய அவசியமே இல்லை. தடை உத்தரவை வாபஸ் வாங்குவதில் அவர்களுக்கு ஒரு நஷ்டமும் இல்லை.

இளவரசர் பகிஷ்காரத்தைத் தடுப்பது அவர்களுடைய முக்கிய நோக்கம். காங்கிரஸே பகிஷ்காரத்தை எடுத்துவிடும் பட்சத்தில் சர்க்காரின் நோக்கம் நிறைவேறி விடுகிறது. தடை உத்தரவுக்கு அவசியம் என்ன?

ஆகவே மாளவியாவின் ராஜியை ஒப்புக்கொண்டால் காங்கிரஸ்தான் விட்டுக்கொடுத்ததாகுமே தவிர, சர்க்கார் எந்த விதத்திலும் விட்டுக் கொடுத்தது ஆகாது.

வட்டமேஜை மகாநாடு கூட்டுவதாகச் சர்க்கார் ஒப்புக் கொள்வதைப் பற்றி எந்தவித நம்பிக்கையும் கொள்ளமுடியவில்லை. வெறும் ஏமாற்றமாகவே முடியலாம். சர்க்கார் கூட்டும் வட்டமேஜையில் காங்கிரஸ் பிரதிநிதிகள் சிலரையும் மிதவாதிகள்—அதிகார வர்க்க பக்தர்கள் பலரையும் அழைக்கலாம். அழைத்து "சட்டமறுப்பைக் காங்கிரஸ் கைவிட வேண்டும்; சர்க்கார் கொடுக்கும் சீர்திருத்தங்களைப் பெற்றுத் திருப்தியடைய வேண்டும்" என்று ஒரு அத்தியாயம் உபதேசம் செய்து அனுப்பலாம். இதனால் தேசம் அடையும் நன்மை என்ன? இத்தனை நாளும் தேச மக்கள் செய்த தியாகமெல்லாம் வீண் போனது ஆகாதா?

எனவே, தாஸ்—ஆஸாத் யோசனையை மகாத்மாவினால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. ஆயினும் அவர்கள் பேரில் மகாத்மாவுக்குப் பெருமதிப்பு இருந்தது. ஒத்துழையாமை இயக்கத்தின் வெற்றிக்கு அவர்கள் பெரிதும் காரணமானவர்கள். எனவே, "உங்கள் யோசனையை நிராகரிக்கிறேன்" என்று பதில் அனுப்பிவிடவில்லை. அவர்களுடைய நிபந்தனைகளோடு இன்னும் சில நிபந்தனைகளையும் சேர்க்க வேண்டும் என்று மகாத்மா காந்தி பதில் அனுப்பினார். அந்தப் பதில் தந்தியின் வாசகம் பின்வருமாறு:—

சபர்மதி

19–12–21

உங்கள் தந்தி கிடைத்தது. வட்டமேஜை மகாநாட்டின் தேதியும், மகாநாட்டுக்கு யார் யார் அழைக்கப்படுவார்கள் என்பதும் முதலிலேயே சொல்லப்பட வேண்டும். கராச்சி கைதிகள் உள்பட, 'பத்வா' கைதிகளையும் சர்க்கார் விடுதலை செய்ய வேண்டும். உங்களுடைய நிபந்தனைகளோடு மேற்கண்ட நிபந்தனைகளும் நிறைவேற்றப்பட்டால் ஹர்த்தாலை வாபஸ் பெறலாம்.

எம். கே. காந்தி

இந்தத் தந்தியில் மகாத்மா காந்தியின் அரசியல் திறத்தோடு அவருடைய சிநேக தர்மத்தின் சிறப்பையும் நேயர்கள் காணலாம்.

மகாநாடு கூட்டும் தேதி, மகாநாட்டுக்கு யார் அழைக்கப்படுவார்கள் என்பதை லார்ட் ரெடிங் சொல்லவேண்டி ஏற்பட்டால் அவருடைய நோக்கம் உண்மையானதுதானா என்பது தெரிந்துவிடும். பின்னால் சால்ஜாப்புகள் சொல்லி ஏமாற்ற முடியாது.

அடுத்தபடியாக, உண்மையில் காங்கிரஸின் கோரிக்கைகளை நிறைவேற்றும் எண்ணம் லார்ட் ரெடிங்குக்கு இருக்குமானால், இப்போது கைதியானவர்களை மட்டும் விடுதலை செய்வது போதாது. ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பித்த பிறகு சிறைப்பட்டவர்கள் எல்லாரையும் விடுதலை செய்யவேண்டும். முக்கியமாக, அலி சகோதரர்களை விடுதலைசெய்ய வேண்டும் என்று மகாத்மா வற்புறுத்தினார்.

'பத்வா கைதிகள்' என்பவர்கள் பிரிட்டிஷ் சைன்யத்திலிருந்து உண்மையான முஸ்லிம்கள் ராஜினாமாச் செய்ய வேண்டும் என்றும், சைன்னிய சேவை செய்வது மதத்துரோகம் என்றும் அறிக்கை பிறப்பித்த முஸ்லிம் உலமாக்கள்-மௌலவிகள் முதலியோர். இதே விதமான குற்றத்துக்காகவே அலி சகோதரர்கள் முதலிய கராச்சி கைதிகளும் தண்டிக்கப் பட்டார்கள். அலி சகோதரர்கள் முதலியோரை விட்டு விட்டு மற்றவர்களின் விடுதலையை மட்டும் கோருவதை மகாத்மா விரும்பவில்லை. அது சரியான அரசியல் முறையும் அல்ல, சிநேக தர்மத்துக்கு உகந்ததுமல்ல என்று கருதினார். லார்ட் ரெடிங்குக்கு உண்மையில் காங்கிரஸுடன் ராஜி செய்துகொள்ளும் எண்ணம் இருந்தால் அலி சகோதரர்களை விடுதலைசெய்ய ஏன் தயங்க வேண்டும் என்று கேட்டார்.

இந்தக் கேள்விக்குச் சரியான பதில் வரவில்லை. சர்க்கார் சார்பில் லார்ட் ரெடிங்கும் சொல்லவில்லை; மத்தியஸ்தம் செய்ய முயன்றவர்களும் சொல்லவில்லை. ஆனால் எல்லாருக்கும் மகாத்மாவின் பேரில் கோபம் வந்தது! தேசபந்துவுக்குக்கூடப் பிரமாத கோபம் வந்தது! "நாம் சொன்னதை மகாத்மா காந்தி உடனே அப்படியே ஒத்துக் கொள்ளவில்லையே?" என்று ஆத்திரப்பட்டார்.

நாட்டின் மற்ற எந்தப் பகுதியைக் காட்டிலும் அதிகமான தேசத் தொண்டர்கள் டிசம்பரில் சிறைப்பட்டார்கள்.

வருஷந்தோறும் டிசம்பர் கடைசியில் கவர்னர் ஜெனரல் பதவி வகிப்பவர் கல்கத்தாவுக்குச் சென்று அங்கு வசிக்கும் ஏராளமான ஐரோப்பியர்களின் மத்தியில் கிறிஸ்மஸ் பண்டிகை கொண்டாடுவது வழக்கம். இதையொட்டி லார்டு ரெடிங் கல்கத்தா சென்றார். வேல்ஸ் இளவரசர் விஜயமும் அதே சமயத்தில் சேர்ந்து கொண்டது. கவர்னர்—ஜெனரல் லார்ட் ரெடிங்கும், வங்காள கவர்னர் லார்ட் ரொனால்ட்ஷேயும் காங்கிரஸ் தலைவர்களைத் தாக்கிப் பேசினார்கள். அந்தப் பேச்சில் ஒன்றில் தான் லார்ட் ரெடிங் "எனக்கு ஒன்றும் புரியவில்லை; என் மனம் குழம்புகிறது" என்றார். மொத்தத்தில் அவர்களுடைய பேச்சுக்களில் கவலை தொனித்தது. கல்கத்தாவில் வேல்ஸ் இளவரசர் பகிஷ்காரம் நடைபெறுவதை எப்படியாவது தடுக்க வேண்டும் என்ற ஆவலும் வெளிப்பட்டது.

இப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலேதான் பண்டித மாளவியா ராஜி பேசுவதற்காகக் கல்கத்தா சென்றார். அங்கே மூன்றுமுறை லார்ட் ரெடிங்கைப் பேட்டிகண்டு பேசினார். அந்தப் பேச்சுகளிலிருந்து ராஜி செய்து வைக்க இடம் இருக்கிறது என்று கருதினார். மகாத்மாவிடமிருந்து பதில் இன்னும் வரவில்லை. பதில் வரும் வரையில் அவரால் சும்மா இருக்க முடியவில்லை. சிறைக்குள்ளே யிருந்த தேசபந்து தாஸ்—மௌலானா ஆஸாத் இவர்களைப் பார்த்துப் பேசுவதற்குச் சென்றார். ரெடிங்குடன் தாம் நடத்திய சம்பாஷணையைப் பற்றி அவர்களுக்கு அறிவித்தார். மாளவியாவின் மத்தியஸ்தப் பேச்சுக்கு அவர்கள் செவி கொடுத்தார்கள். ஒருவாறு அவருடைய கட்சியை ஒப்புக்கொண்டார்கள். "அப்படியானால், உங்கள் அபிப்பிராயத்தை மகாத்மாவுக்குத் தெரிவியுங்கள்" என்றார் மாளவியா. "சரி" என்றார்கள் தாஸும், ஆஸாதும்.

மகாத்மாவுக்கு ஒரு தந்திச் செய்தி எழுதினார்கள். அது வங்காள கவர்ன்மெண்டின் அநுமதியுடன் அவசர 'லைன் கிளியர்' தந்தியாக மகாத்மா காந்திக்கு அனுப்பப்பட்டது. அந்த அவசரத் தந்தியின் வாசகம் பின் வருமாறு:—

கல்கத்தா
19–12–29

பின்வரும் நிபந்தனைகள் பூர்த்தியானால் ஹர்த்தாலை வாபஸ் பெறலாம் என்று நாங்கள் சிபார்சு செய்கிறோம்:—

(1) காங்கிரஸ் எழுப்பி யிருக்கும் எல்லாப் பிரச்னைகளையும் பற்றி ஆலோசிக்கச் சர்க்கார் மகாநாடு கூட்ட வேண்டும்.

(2) சமீபத்தில் வெளியான சர்க்கார் அறிக்கையையும் போலீஸ் - மாஜிஸ்ட்ரேட் உத்தரவுகளையும் வாபஸ் வாங்க வேண்டும்.

(3) புதிய சட்டத்தின் கீழ்ச் சிறைப்பட்ட எல்லாக் கைதிகளையும் நிபந்தனையின்றி விடுதலை செய்ய வேண்டும்.

கல்கத்தா பிரஸிடென்ஸி ஜெயில் சூபரிண்டெண்டு மேற்பார்வைக்கு உடனே பதில் அனுப்புங்கள்.

சி. ஆர். தாஸ்

ஏ. கே. ஆஸாத்

மேற்கண்ட தந்தி மகாத்மாவைத் திடுக்கிடச் செய்து விட்டது.

மாளவியாவிடம் மகாத்மாவுக்கு மிக்க மதிப்பு உண்டு. தாஸ்—ஆஸாத் இவர்களிடம் மிக்க அபிமானம் உண்டு. ஆயினும் அவர்கள் மூவரும் லார்ட் ரெடிங்கின் மாய வார்த்தையில் ஏமாந்துபோய் விட்டார்கள் என்றே காந்திஜி கருதினார்.

காந்தி மகானுக்குச் சத்தியமே தெய்வம். அஹிம்சையே மதம். நேர்மையே உயிர். ஆயினும் அவர் அரசியலில் மகா நிபுணத்துவம் வாய்ந்தவர். சூழ்ச்சி செய்து அவரை ஏமாற்றிவிட முடியாது.

தாஸ்—ஆஸாத் தந்தியில் உள்ள குறை என்ன என்பது மகாத்மாவுக்கு அதைப் படித்த உடனே தெரிந்துவிட்டது.

ரெடிங் — ரொனால்ட்ஷே கூட்டத்துக்குத் திடீரென்று காங்கிரஸ் தலைவர்களிடம் அன்பு பிறந்துவிடவில்லை. வேல்ஸ் இளவரசர் பகிஷ்காரத்தினால் அவர்கள் பெரிதும் சங்கடத்துக்கு உள்ளாகியிருந்தனர். அதிகார வர்க்கத்தின் மதிப்பே அதனால் போய்விடுவதாயிருந்தது. கல்கத்தா ஒரு நகரத்திலாவது பகிஷ்காரம் தடுக்கப்பட்டால் அவர்களுடைய மதிப்பு ஓரளவு காப்பாற்றப்படும்.

இதற்காக அவர்கள் சூழ்ச்சி செய்தார்கள். அந்தச் சூழ்ச்சியில் மாளவியா விழுந்தது மட்டுமல்ல; தாஸையும், ஆஸாதையும்கூட விழப்பண்ணி விட்டார்.

வேல்ஸ் இளவரசர் விஜயத்தை முன்னிட்டே தொண்டர் படைகளைச் சட்ட விரோத ஸ்தாபனங்கள் என்று சர்க்கார் உத்தரவு பிறப்பித்தனர். அந்த உத்தரவை மீறிச் சட்ட மறுப்புச் செய்து காங்கிரஸ் தலைவர்கள் சிறை புகுந்தனர்.

பகிஷ்காரத்தைக் காங்கிரஸ் தலைவர்கள் வாபஸ் வாங்குவதாயிருந்தால்,

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

ரா.கி.

## 33. தாஸ்-ஆஸாத் தலையீடு

இந்தியாவின் சரித்திரத்திலேயே மிக முக்கியமான வருஷம் 1921-ம் வருஷம். அந்த வருஷத்திலேதான் இந்திய தேசத்தில் இமயமலை முதல் கன்னியாகுமரி வரையில் மக்கள் விழித்தெழுந்தனர். அன்னிய ஆட்சியை எதிர்த்து நிற்கத் துணிந்தனர். அந்தத் துணிச்சலை மக்களுக்கு உண்டாக்கிய ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பித்து நடத்தியவர் மகாத்மா காந்தி. அந்த வருஷத்தில் மகாத்மாவுக்கு அடுத்தபடியாக இந்திய மக்களின் கவனத்தைக் கவர்ந்து அவர்களுடைய போற்றுதலுக்கு உரியவராயிருந்த தலைவர் யார் என்று கேட்டால், வங்காளத்தின் முடிசூடா மன்னராக அப்போது விளங்கிய தேசபந்து சித்தரஞ்சனதாஸ் அவர்கள்தான். அவர் நெடுநாளைய தேசபக்தர். ஸ்ரீ அரவிந்த கோஷ்மீது புரட்சி இயக்க வழக்கு நடந்தபோது அவர் பக்கம் ஆஜராகி வாதித்துப் புகழ் பெற்றவர். வருஷத்திற்கு ஆறு லட்சம் ரூபாய் வக்கீல் தொழிலில் அவருக்கு வருமானம் வந்தது என்பது தேசத்தில் பிரசித்தமாயிருந்தது. அப்படிப்பட்ட வருமானமுள்ள தொழிலை அவர் ஒத்துழையாமை இயக்கம் காரணமாகக் கைவிட்டார் என்பது இந்திய மக்களை ஆச்சரியக் கடலில் மூழ்க அடித்து, அவரிடம் எல்லையற்ற பக்தியையும் மதிப்பையும் அளித்திருந்தது. அத்தகைய மாபெருந் தியாகி அந்த வருஷத்தில் ஆமதாபாத்தில் நடப்பதற்கிருந்த காங்கிரஸ் மகா சபையின் அக்கிராசனராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தார். நாகபுரி காங்கிரஸுக்குப் பிறகு 1921-ம் வருஷம் முழுவதும் அவர் மகாத்மாவைப் பரிபூரணமாக ஆதரித்து நின்றார். இதனால் வங்காளம் ஒத்துழையாமை இயக்கத்தில் முதன்மை ஸ்தானம் வகித்தது. நெடுகிலும் அவருக்குப் பக்கபலமாக நின்று வேலைசெய்த முஸ்லிம் தலைவர் மௌலானா அபுல் கலாம் ஆஸாத். தேசபந்து தாஸ் வங்காள மாகாண காங்கிரஸுக்கும் மௌலானா ஆஸாத் வங்காள கிலாபத் கமிட்டிக்கும் தலைவர்களாயிருந்தார்கள்.

வேல்ஸ் இளவரசர் டிசம்பர் மீ கடைசி வாரத்தில் கல்கத்தா வருவதாகத் தேதி குறிப்பிடப் பட்டிருந்தது. இளவரசர் சென்றிருந்த மற்ற இந்திய நகரங்களில் போலவே கல்கத்தாவிலும் மாபெரும் ஹர்த்தால் நடத்தும்படி காங்கிரஸ்—கிலாபத் ஸ்தாபனங்கள் ஏற்பாடுகள் செய்துவந்தன. இந்த நிலையில் வங்காள மாகாண சர்க்கார் தேசியத் தொண்டர் படைகளைச் சட்ட விரோத ஸ்தாபனங்கள் என்று தெரியப்படுத்தினார்கள். இதற்காக 1908-ம் வருஷத்தில் பலாத்காரப்புரட்சி ஸ்தாபனங்களைக் கலைப்பதற்காகச் செய்யப்பட்ட 'கிரிமினல் லா அமெண்ட்மெண்ட் ஆக்ட்' என்னும் சட்டத்தை உபயோகப் படுத்தினார்கள். இளவரசர் விஜயம் செய்யும்போது ஹர்த்தால் நடப்பதைத் தடுக்க வேண்டும் என்பதே அவர்களுடைய நோக்கம். அந்த நோக்கத்தை அறிந்து, மேற்படி அநியாயச் சட்டத்தை எதிர்த்துச் சத்தியாக்கிரஹம் செய்யக் காங்கிரஸ் தலைவர்கள் தீர்மானித்தார்கள். ஒவ்வொரு நகரத்திலும் பிரபல காங்கிரஸ் தலைவர்கள் தங்களைத் தொண்டர் படையில் பதிவு செய்து கொண்டு அதை விளம்பரப் படுத்தினார்கள். பண்டித நேரு முதலியவர்கள் ஐக்கிய மாகாணத்தில் செய்ததுபோல் கல்கத்தாவில் தேசபந்துதாஸ், மௌலானா ஆஸாத் முதலியவர்கள் சட்டத்தை மீறினார்கள். அவர்கள் உடனே கைது செய்யப்பட்டார்கள். வங்காளிகள் உணர்ச்சி மிக்கவர்கள்; தேசியப் போரில் எப்போதுமே முன்னணியில் நின்றவர்கள். தேசபந்து தாஸும் அவருடைய மனைவியும் சகோதரியும் கைது செய்யப்பட்டபோது வங்காளிகளின் மனோநிலை எப்படி யிருக்கும் என்று கேட்கவேண்டுமா? ஒரே கொந்தளிப்புத்தான். ஆகவே

யம் பிரேமாவின் கல்யாண விஷயம்தான். அத்தையின் உடல் நிலையோ வர வர மோசமாகிக் கொண்டே வந்தது. பிரேமாவுக்கு விவாகம் செய்து விட்டால் அத்தையின் பொறுப்பு நீர்ந்து விடும். அப்புறம் நிம்மதியாகக் கண்ணை மூடலாம்.

பிரேமா வழக்கம்போல் அன்று மாலை தன் தாயாருக்கு அருகில் உட்கார்ந்து அவளுக்கு வேண்டிய சிசுருஷைகளைச் செய்து கொண்டிருந்தாள்.

'டக் டக்' என்று வாசல் கதவு தட்டும் சத்தம் கேட்டது. பிரேமா எழுந்து சென்று கதவைத் திறந்தாள். ஒரு கணம் பிரேமாவுக்கு உடம்பை என்னவோ செய்தது. வந்திருந்தவர் வேறு யாரும் இல்லை. சாக்ஷாத் மூர்த்திதான்!

பிரேமா கதவைத் திறந்து விட்டு 'விடு விடு' என்று உள்ளே வந்து விட்டாள். மூர்த்தியும் பின்னாலேயே வந்து பெட்டி படுக்கையைக் கொண்டுவந்து வைத்தான்.

"அத்தை, அத்தை!" என்று கூப்பிட்டுக் கொண்டே அத்தையிடம் வந்தான்.

"அப்பா மூர்த்தி! வந்து விட்டாயா? எங்களை யெல்லாம் விட்டு விட்டு எங்கேயடா போய் விட்டாய்?" என்று கேட்டு அத்தை அலறி விட்டாள்.

"அத்தை, இனிமேல் உங்களை யெல்லாம் விட்டு விட்டு எங்கேயும் போக மாட்டேன். நான் பம்பாயில் இருந்தேன். அங்கே எனக்கு ஒரு நல்ல வேலை கிடைத்திருக்கிறது. அந்த வேலையைச் சென்னைக்கே மாற்றிக் கொண்டு வந்து விட்டேன்!" என்று சொல்லிக் கொண்டே பிரேமாவைப் பார்த்தான் மூர்த்தி. பிரேமா தலையைக் குனிந்து கொண்டு நின்று கொண்டிருந்தாள். அவள் கண்களிலிருந்து நீர் பெருகி வழிந்தது.

"பிரேமா!" என்று அன்பு ததும்பக் கூப்பிட்டுக் கொண்டே மூர்த்தி அருகில் சென்று அவள் கையைப் பிடித்தான். அவளுக்குப் பேச நாஎழவில்லை. பிரேமா முன்மாதிரி இப்பொழுது கையை விடுவித்துக்கொண்டு ஓடவில்லை.

விரைவில் மூர்த்திக்கும் பிரேமாவுக்கும் விவாகம் நடந்தேறியது.

இப்பொழுதெல்லாம் மூர்த்தி ஒரு நிமிஷம் வெளியே போவதா யிருந்தாலும் பிரேமாவைக் கேட்டுக் கொண்டுதான் போக வேண்டும்.

நினைவுப் பாதையில் வெகு தூரம் சென்று விட்ட பிரேமாவுக்கு மூர்த்தி ஆபீஸிலிருந்து வந்ததே தெரியவில்லை.

"என்ன, பிரேமா! உனக்குச் சம்மதம் தானே! இன்றைக்கு இரவு 'ஔவையார்' நாடகத்துக்குப் போகலாம்" என்று சொல்லிக்கொண்டே மூர்த்தி பிரேமாவுக்கு அருகில் வந்தான். "என் சம்மதம் வேண்டுமா?" என்று கேட்டுக்கொண்டே பிரேமா நிமிர்ந்து அவனைப் பார்த்தாள்.

---

# காலக்ஷேபம்

---

"என்னடா, நான் எது சொன்னாலும் நீ பதிலுக்கு என்னையே ஒரு கேள்வி கேட்டு விடுகிறாயே?"

"அப்படிக் கேட்கிறேனா, என்ன?"

★

புதிதாகத் திறக்கப்பட்ட ஒரு ஹோட்டலில் ஒருவர் சாப்பிடப் போனார்.

அவர் (ஹோட்டல் முதலாளியிடம்):— கேளுங்கள், ஸார்! நான் முன்பு ஒரு ஹோட்டலில் வருஷக் கணக்காகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். கடைசியில் அந்த ஹோட்டலை விட்டு வரும்போது அந்த ஹோட்டல் சொந்தக்காரர் கண்ணீர் ஜலம் விட்டார்!

ஹோட்டல் முதலாளி:— இங்கே அப்படி ஏற்படாது, ஸார்! நான் முன்பணம் வாங்கிக் கொண்டுதான் சாப்பாடு போடுகிறேன்!

"நான் உனக்கு வேலை செய்து வைக்கப் போவதைப் பற்றி ஒருவரிடமும் பிரஸ்தாபிக்காதே என்று சொல்லியிருந்தும், நீ ராஜுவிடம் நேற்றுச் சொல்லிவிட்டாயாமே!"

"ஆமாம். அவன் என்னிடம் 'உனக்கு எந்த மடையனும் வேலை பண்ணி வைக்க மாட்டான்' என்றான். எனக்குக் கோபம் வந்தது. நீங்கள் ஒருவர் இருக்கிறீர்கள் என்று ஒரு வார்த்தை சொல்லிவைத்தேன்."

★

மானேஜர்:— நீ ரொம்பச் சின்னப் பையனாயிருக்கிறாயே! இன்னும் கொஞ்சம் வயதான பையனாகத்தான் எனக்கு வேலைக்கு வேண்டும்.

பையன்: அப்படியானால், ஒரு வாரம் கழித்து வந்து உங்களைப் பார்க்கட்டுமா?

நீ என்ன கேட்கிறாய்?'' என்று தடுமாறிக் கொண்டே கேட்டுக் கையைத்திமிறினள். ஆனல் அவன் கைப்பிடி தளருவதாயில்லை.

''பிரேமா, என்னை உனக்குப் பிடிக்கிறதா? சொல், சொன்னல்தான் விடுவேன்!'' என்றான் மூர்த்தி.

''சீ! உன் காரியம் கொஞ்சங்கூட நன்ருக இல்லை. விடு என் கையை!'' என்று கோபத்துடன் கூறி, பிரேமா வலுவில் தன் கரங்களை விடுவித்துக் கொண்டு 'விடு விடு' என்று என்று மாடியை விட்டுக் கீழே இறங்கிப் போய் விட்டாள்.

மூர்த்திக்குக் கொஞ்ச நேரம் ஒன்றும் தெரியவில்லை. அவன் மனம் இருண்டு போனதுபோல் தோன்றியது. வான வெளியில் மிதந்த சந்திரனை ஒரு சிறு கார்மேகம் மறைத்தது. அவனும் மாடியை விட்டுக் கீழே இறங்கித் தன் அறைக்குப் போய்ப் படுக்கையில் சாய்ந்தான்.

மூர்த்தி சாப்பிடாமல் படுத்துக் கொள்ளவே பிரேமாவும் சாப்பிடவில்லை. அத்தைக்கு இந்த விஷயம் எதுவும் தெரியாது. ''ஏண்டாப்பா, மூர்த்தி! உனக்கு உடம்புக்கு என்ன? ஏன் சாப்பிடவில்லை?'' என்று அன்பு ததும்பக் கேட்டாள்.

''அத்தை! எனக்கு பசியே இல்லை, என்னைத் தொந்தரவு செய்யாதே?'' என்று மூர்த்தி கண்டிப்பாகச் சொல்லி அத்தையை அனுப்பிவிட்டான். இரவு முழுவதும் தூக்கம் இல்லாமல் மன வேதனையுடன் கழித்தான்.

மறுநாள் காலையில் வெகு நேரம் ஆகியும் மூர்த்தி படுக்கையை விட்டு எழுந்து வந்தபாடாயில்லை. அத்தை அவன் அறைக்குச் சென்று பார்த்தாள். மூர்த்தி படுக்கையில் இல்லை. எங்கேயாவது உலாவப் போயிருப்பான் என்று நினைத்து வெகு நேரம் காத்திருந்தாள். மூர்த்தி வரவில்லை. பிரேமா பதறிப் போய் விட்டாள். அவன் சொல்லிக் கொள்ளாமல் மறைந்ததற்குக் காரணம் அவள் தானே என்ற வேதனை அவளை வாட்டத் தொடங்கியது. ஆனல் முதல் நாள் இரவு சம்பவத்தைப் பற்றிப் பிரேமா அம்மாவிடம் வாய் திறக்கவில்லை.

ஒரு வாரம் ஆகியும் மூர்த்தி வீட்டுக்குத் திரும்பவில்லை. அத்தையின் மனக் கஷ்டத்தைச் சொல்லி முடியாது. நல்ல அந்தஸ்தும் செல்வாக்குமுள்ள குடும்பம் ஆதலால் அத்தைக்கு இதைப் பற்றி வெளியில் சொல்லிக் கொள்ளவும் மனசுக்கு என்னவோ போல் இருந்தது.

பிரேமா பட்ட மனவேதனைதான் சகிக்க வொண்ணுததாக இருந்தது. நாள் செல்லச் செல்ல மூர்த்தியிடம் அவளுக்கு இருந்த அன்பெல்லாம் இனந்தெரியாத ஒரு புது மாதிரியில் உருவாகிக் கொண்டு வந்தது. மூர்த்தி அன்று இரவு அவளிடம் நடந்து கொண்ட மாதிரி அப்பொழுது அவளுக்கு விளங்காததாயிருந்தது. ஆனல் இப்பொழுது அவனை நினைத்து அவள் உருகாத நாளில்லை.

மூன்று வருஷங்கள் ஓடி விட்டன. மூர்த்தி போன இடம் தெரியவில்லை. பிரேமா துரும்பாகி விட்டாள். அத்தையும் அடியோடு மாறிப் போய் விட்டாள். பிரேமாவைப் பார்க்கும் போதெல்லாம் அவளுக்குத் துக்கம் பொங்கும்.

''இந்த அசட்டுப்பிள்ளை இப்படிச் செய்யுமோ! அவனை எவ்வளவு ஆசையாக வளர்த்தேன்!'' என்று புலம்பிக் கொண்டிருந்தாள். இதே வேதனையில் அத்தை படுத்த படுக்கையாகி விட்டாள். பிரேமா தன் துக்கத்தை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் அம்மாவுக்குத் தேறுதல் கூறி வந்தாள். இப்போது பிரேமாவுக்குப் பதினெட்டு வயதுக்கு மேல் ஆகி விட்டது. இயற்கை அவள் மனவேதனையைக் கொஞ்சமும் அறிந்ததாகத் தெரியவில்லை. மன வாட்டத்திலும் அவள் அழகு பிரமாதமாய்த்தான் இருந்தது.

மூர்த்தி வீட்டை விட்டுச் சென்றதை விட அத்தைக்கு மனவருத்தம் தந்த விஷ



யாணத்தைச் 'சட்டுப் புட்டு' என்று முடிக்க வேண்டாமோ?" இது பக்கத்து வீட்டுப் பாட்டியின் குரல்.

"ஆமாம், பாட்டி! அவன் படிப்பு முடிந்ததும் அவனுக்கும் அவளுக்கும் ஒரு முடி போட்டுவிடலாம் என்று பார்க்கிறேன். பிரேமா இன்னும் குழந்தையாகவே இருக்கிறுள். வயசுதான் பதினைந்து ஆகிறது. அவளுக்குச் சூதுவாது ஒன்றும் தெரியவில்லை. அவனும் இன்னும் குழந்தைமாதிரிதான் இருக்கிறுன். அதனுலே......!" என்று அத்தை சொல்லி முடிப்பதற்குள், அந்தப் பாட்டி குறுக்கிட்டாள்.

"அது என்ன, அப்படிச் சொல்லுகிறுய்? கல்யாணத்தைப் பண்ணிவிட்டால் எல்லாம் தானே சரியாய்ப் போய் விடும். குழந்தைகள் அப்படித்தான் இருக்கும்......!" என்று இன்னும் ஏதேதோ அந்தப் பாட்டி பேசிக்கொண்டே போனுள்.

மூர்த்தி அதற்குமேல் ஒன்றும் கவனிக்கவில்லை. அத்தையின் பேச்சு அவன் மனசில் புகுந்து வேலை செய்ய ஆரம்பித்தது. பிரேமாவுக்கும் தனக்கும் கல்யாணமா? இது அவனுக்கே ஆச்சரியமாயிருந்தது. இது வரையில் மூர்த்தி இதைப் பற்றிச் சிந்தித்துப் பார்த்ததே



கிடையாது. அவனுக்குத் தன் கல்யாணத்தைப் பற்றியே சிந்தனை எழுந்ததில்லை. அதுவும் பிரேமாவுக்கும் அவனுக்கும் விவாகத்தின் மூலம் பந்தம் ஏற்படுத்திக் கொள்ளுவதைப் பற்றிக் கனவில் கூட அவன் நினைத்ததில்லை. இப்பொழுது அந்த எண்ணம் அவன் மனத்தில் ஒரு நூதன உணர்ச்சியைத் தந்தது. பிரேமாவைப் பற்றி அவன் மனம் சிந்தனை வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்தது. மூர்த்தி எழுந்து மேல் மாடிக்குச் சென்றுன். இரவு மணி எட்டு இருக்கும். பாதிமதி வான வீதியில் வெள்ளித் தோணியைப் போல் மிதந்து கொண்டிருந்தது. வாசற்புறத்திலிருந்து பவழ மல்லிகையின் மணம் கம்மென்று வந்தது. மாடியிலிருந்த மேடையில் உட்கார்ந்து மூர்த்தி இனந்தெரியாத இன்ப நினைவில் மிதந்து கொண்டிருந்தான்.

வெண்முகிற் கூட்டங்கள் சந்திரனை ஒரு கணம் மறைத்து விட்டு நகர்ந்தன. சந்திரன் மீண்டும் தன் ஒளியைப் பரப்பினுன்.

மூர்த்தியின் மனத்திரையில் படர்ந்திருந்த மேகங்களும் விலகின. பிரேமாவின், கண்ணைக் கவரும் வனப்பு இப்பொழுது அவனுக்கு நன்ருய்த் தெரிந்தது. பிரேமாவைக் கல்யாணம் செய்து கொள்வது வாழ்க்கையிலேயே இணையற்ற பாக்கியம் என்று அவன் உள் மனம் அவனுக்குச் சொல்லியது. இதுவரையில் இதைப் பற்றிச் சிந்தித்துப் பாராதது எவ்வளவு அறியாமை என்று நினைத்து அவன் தனக்குள் சிரித்துக் கொண்டான்.

"மூர்த்தி, சாப்பிட வரவில்லையா? எந்தக் கோட்டையைப் பிடிக்கப் பிரமாதமாக யோசனை செய்கிறுய்?" என்று கேட்டுக் கொண்டே வந்து மூர்த்தியின் தோளைத் தொட்டாள் பிரேமா.

மூர்த்திக்கு எல்லாம் கனவில் நடக்கிற மாதிரி இருந்தது. சடக்கென்று இந்த உலக நினைவுக்கு வந்து கண்ணைத் திறந்து பார்த்தான். பிரேமாவின் ஸ்பரிசம் இன்று அவன் உள்ளத்தில் இனந்தெரியாத மகிழ்ச்சியைத் தந்தது. அவள் குரலில் தொனித்த இதம் இது வரையில் அவன் கேட்டிராத புது மாதிரியாயிருந்தது. நிலவொளியில் அவன் கண்களுக்குப் பிரேமா புது விருந்து அளித்தாள்.

பொங்கி வரும் உவகையோடு மூர்த்தி, "பிரேமா! பிரேமா! உனக்குச் சம்மதந்தானே? சொல், பார்க்கலாம்!" என்று பலமாகக் கேட்டுக் கொண்டே பிரேமாவின் கரங்களைப் பிடித்தான்.

பிரேமாவினுல் அவன் போக்கை அறிந்து கொள்ள முடியவில்லை. "ஐயோ, மூர்த்தி. உனக்கு என்ன வந்து விட்டது?

மூர்த்தியின் அத்தை பெண் பிரேமா. அவர்களிருவரும் ஒரே வீட்டில் குழந்தைப் பருவமுதல் வளர்ந்து வந்தார்கள். சின்னஞ் சிறு வயதிலேயே பெற்றோரை இழந்த மூர்த்திக்கு அத்தைதான் அடைக்கலம் தந்து கண்ணுக்குக் கண்ணாக வளர்த்தாள்.

படிப்பு, விளையாட்டு, சாப்பாடு எல்லாவற்றிலும் மூர்த்தியும் பிரேமாவும் இணைபிரியாமல் இருந்தார்கள்.

மூன்றாவது பாரத்தோடு பிரேமாவின் பள்ளிக்கூடப் படிப்பு நின்றுவிட்டது. அத்தை மூர்த்தியை மட்டும் பள்ளிக்கூடப் படிப்பு முடிந்ததும் கலாசாலையில் சேர்த்தாள்.

அப்பொழுது மூர்த்தியிடமிருந்த விளையாட்டுக் குணம் எல்லாம் மறைந்துவிட்டது. மிகவும் சிரத்தையோடு படித்தான். கலாசாலையிலிருந்து வீட்டுக்கு வந்ததும் ஏதாவது சிற்றுண்டியும் காப்பியும் சாப்பிடுவான். சற்று நேரம் வெளியே போய் உலாவிவிட்டு வந்து உடனே படிக்க உட்கார்ந்து விடுவான். விடுமுறை நாட்களில் கூட அவன் தன் புத்தகங்களுக்கு விடுமுறை யளிக்க மாட்டான்.

அவன் குழந்தைப் பருவமுதல் பிரேமாவோடு விளையாடிப் பழகினமாதிரி இப்போது அவ்வளவு பழகுவதில்லை. சதா காலமும் தான் உண்டு, தன் படிப்பு உண்டு என்று மூர்த்தி புத்தகமும் கையுமாக இருந்தான்.

அவர்கள் வசித்த பங்களாவின் பின்புறத்தில் பெரிய தோட்டம் இருந்தது. அந்தத் தோட்டத்தில் தென்னை மரம், மாமரம் எல்லாம் நிறைந்திருந்தன. மூர்த்தியும் பிரேமாவும் சிறு குழந்தைகளா யிருந்த போது வைத்த மாங்கன்றுகளெல்லாம் பெரிதாக வளர்ந்து பூத்துப் பலன்தர ஆரம்பித்தன. வாசலில் இருந்த பவழ மல்லிகை பெரிய மரமாகிப் பூத்துக் குலுங்கி 'கம்' என்று மணம் வீசியது. ஆனால் இந்த மாறுதல்களினாலெல்லாம் மூர்த்தியின் மனப் போக்கு சிறிதும் மாறுதல் அடையவில்லை.

பச்சைப் பட்டுப் பாவாடையும் வெண் பட்டுச் சட்டையும் அணிந்து கொண்டு தந்தத்தில் கடைந்தெடுத்த பதுமையைப் போல் இருந்த சிறுமி பிரேமா இப்போது அழகிய பட்டுத் தாவணி யணிந்து கொண்டு முன்னைக்காட்டிலும் அழகாயிருந்தாள். அவள் பேச்சில் ஒருவித அடக்கமும் பார்வையில் ஒரு மின்வெட்டும் இருந்தன.

நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகத் திகழும் பிரேமா மூர்த்தியைப் பொறுத்த வரையில் ஒரு சின்னஞ் சிறு பெண்ணாகவே இருந்தாள். பருவம் அவள் மீது அள்ளித் தெளித்திருக்கும் இணையற்ற அழகை மூர்த்தியினால் அறிந்துகொள்ள முடியவில்லை.

பிரேமாவின் தன்மையிலும் எந்த மாறுதலும் காணப்படவில்லை; உற்சாகமாகப் பட்டுப் பூச்சியைப் போலப் பறந்து இங்கு மங்கும் திரிந்தாள். பிரேமாவின் அழகைக் கண்டு அவளை யாரேனும் உற்றுப் பார்த்தால் அவளுக்கு ஆச்சரியமாயிருக்கும். 'என்னிடம் என்ன இருக்கிறது? எதற்காக என்னை விழுங்கி விடுவது போல் பார்க்கிறார்கள்?' என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டு சிரிப்பாள்.

மூர்த்தி காலையில் எழுந்தது முதல் தன் கருமமே கண்ணாயிருப்பான். அப்படியிருந்தும் அவனுக்குக் கலாசாலைக்குப் போக நேரமாகிவிடும். பறந்து பறந்து தன் காரியத்தைக் கவனித்து விட்டு ஸ்நானத்தை முடித்துக் கொண்டு சாப்பிட வருவான். மணை, தட்டு ஒன்றும் தயாராயிருக்காது.

"பிரேமா, என் கண்ணே இல்லையோ! மணையைப் போட்டுத் தட்டை எடுத்து வை. எனக்குக் காலேஜுக்கு நேரம் ஆகிவிட்டது!" என்று கெஞ்சும் குரலில் கொஞ்சுதலாகச் சொல்லிப் பிரேமாவிடம் வேலை வாங்குவான் மூர்த்தி.

கலாசாலை முடிந்து மாலையில் வீட்டுக்குத் திரும்பும்போது, வாசலில் நுழையும்போதே "பிரேமாப் பட்டு, இந்தா பச்சை ரிப்பன்! உனக்கு ரொம்பவும் பிடிக்குமே!" என்று பலமாகச் சொல்லிக் கொண்டே வந்து பிரேமாவிடம் ரிப்பனைக் கொண்டு வந்து கொடுப்பான். இதேமாதிரி ஒரு நாள் மல்லிகை, கதம்பம், இன்னொரு நாள் ஏதாவது தின்பண்டம்—இப்படி எதையாவது வாங்கிக் கொண்டு வருவான்.

அவனோடு பழகிப் பழகிப் பிரேமாவுக்கும் அவனது குழந்தை சுபாவம் வேடிக்கையாக இல்லை. சகஜமாகவே இருந்தது.

அன்று கலாசாலையிலிருந்து வந்ததும் மூர்த்தி தன் அறையில் வந்து சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டான். சமையலறைத் தாழ்வாரத்தில் உட்கார்ந்து அவன் அத்தையும் அடுத்த வீட்டுப் பாட்டியம்மாளும் பேசிக்கொண்டிருந்தனர். அவர்கள் பேச்சில் மூர்த்தியின் பெயர் அடிபடவே அவன் காது கொடுத்துக் கவனமாக அந்தச் சம்பாஷணையைக் கவனிக்கலானான்.

"ஏண்டியம்மா, பிரேமாவுக்கு வயசு பதினைந்து ஆகவில்லையா? அவள் கல்




அன்று மாலை ஐந்து மணி ஆகியும் மூர்த்தி ஆபீஸிலிருந்து வரவில்லை. நேரம் ஆக ஆகப் பிரேமாவுக்கு இருப்பே கொள்ளவில்லை. எத்தனை தடவை கூடத்துக் கடிகாரத்தைப் பார்ப்பாள்! அண்டை அயல் வீட்டுப் புருஷர்களெல்லாம் ஆபீஸிலிருந்து வந்தாகி விட்டது. இவருக்கு மட்டும் என்ன இன்று ஆபீஸில் இத்தனை நேரம்?

ஐந்து மணிக்குமேல் ஒரு நிமிஷம் கழிந்து விட்டாலும் மூர்த்தியைக் காணாமல் பிரேமா பதறிப் போய் விடுவாள். மூர்த்தி ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வரும்போதே, வாசலிலேயே "பிரேமா!" என்று கூப்பிட்டுக் கொண்டேதான் வருவான். ஒரு நாள் அவள் அவனை ஓடி வந்து வரவேற்கவில்லை என்றால் அவனுக்கு மனசு கேட்காது. அவள் உடம்புக்கு என்னவோ ஏதோ என்று துடித்துப் போய் விடுவான்.

ஒரு சமயம் மூர்த்தி ஆபீஸ் விஷயமாக பெங்களூருக்குப் போனான். மூன்று நாட்களில் வருவதாகச் சொல்லிப் பிரேமாவைச் சமாதானப்படுத்தி விட்டுப் போனவன் ஒரு நாள் தாமதமாக வந்தான். அப்பொழுது பிரேமாவைப் பார்த்ததும் அவனுக்கு அடையாளமே தெரியவில்லை. அழுது அழுது அவள் முகமெல்லாம் என்னவோ போல் இருந்தது; அவள் தலைவாரிப் பின்னிக்கொள்ளவில்லை; நெற்றிக்குப் பொட்டு இட்டுக் கொள்ளவில்லை. சாப்பிடவும் இல்லை. மூர்த்தியைக் கண்ட பின்புதான் அவள் முகத்தில் களை திரும்பிப் பொலிவு ஏற்பட்டது.

இதையெல்லாம் பார்த்தால் பிரேமா ஒரு பிடிவாதக்காரி என்று தோன்றும். அப்படி யாராவது நினைத்தால் அது சுத்தத் தவறு. பிரேமா என்னும் பெயருக்கு ஏற்ப அவள் உள்ளத்தில் பிரேமை நிறைந்திருந்தது.

கணவனின் சில மணி நேரப் பிரிவைக் கூடச் சகிக்க முடியாமல் அவள் தவிப்பதற்குக் காரணம் இல்லாமல் போகவில்லை. ஏழு வருஷங்களுக்கு முன்பு நடந்த அந்தச் சம்பவம்தான் அவளை மூர்த்தியை விட்டுக் கொஞ்சமும் பிரிய முடியாமல் செய்துவிட்டது. மூன்று வருஷ காலம் அவளது இளம் உள்ளம் தூண்டிற் புழுவினைப்போல மூர்த்தியின் பிரிவாற்றாமையினால் துடித்தது. அதற்கு முன்னாலெல்லாம், ராமாயணத்தில் சீதை தன்னையும் கானகத்துக்கு அழைத்துச் செல்லவேண்டும் என்று ராமனிடம் வற்புறுத்தி மன்றாடினாள் என்று படிக்கும்போதெல்லாம் பிரேமாவுக்குச் சிரிப்புத்தான் வரும். அப்பொழுது சீதையின் உண்மையான மனத்துடிப்பை அவளால் உணர முடியவில்லை. ஆனால் பிறகு நடந்த சம்பவம் அவள் மனதை மிகவும் மாற்றிவிட்டது. பத்து மாதம் ராமனைவிட்டுப் பிரிந்து இலங்கையில் அசோக வனத்தில் வசித்த சீதா தேவியின் மனத் துணிவை இப்பொழுது நினைத்துப் பார்க்கக் கூடப் பிரேமாவினால் முடியவில்லை.

பொன் மானைப் பிடித்துத் தரும்படி சீதை ராமனை வேண்டியது — ராமன் அந்த மானைத் தொடர்ந்தது — இந்தக் கட்டத்தை நினைத்தாலே பிரேமாவுக்குச் சீதையிடம் கோபம்தான் வரும். 'ராமனை விடப் பொன்மான் அவ்வளவு உயர்ந்ததா?' என்றுதான் அவள் மனம் கேட்கும்.

சென்று மேன்மை தங்கிய சேட்ஜியின் வரவுக்காக வழிமேல் விழிவைத்துக் காத்துக் கொண்டிருந்தார்.

ராஜூ காத்திருந்தது வீண் போகவில்லை. சேட்ஜியிடமிருந்து ஒரு ஆள் கடிதம் ஒன்றைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டுச் சென்றான். ராஜூ அவசரம் அவசரமாகக் கடிதத்தைப் பிரித்துப் படித்தார்.

“அன்புள்ள ஐயா!

வணக்கம். ஐயாயிரம் ரூபாய்கூடப் பெறாத வைரமாலைக்குத் தாங்கள் ஐயாயிரத்து ஐந்நூறு ரூபாய் கொடுத்து வாங்கிய உமது தாராளத்தையும் தைரியத்தையும் பாராட்டுகிறோம். உம்முடைய ஜோஸ்ய நம்பிக்கையும் தயாள குணமும் வாழட்டும். உமக்குச் சனி திசையிலே சுக்கிரபுத்தி ஆரம்பமாகி யிருக்கிறது. வைரமாலையை வாங்க சேட் வருவார் என்று காத்திருக்க வேண்டாம்.

இப்படிக்கு,

வைரமாலையை விற்ற ஜமீன்தார்

வைரமாலையை வாங்கவந்த சேட்.”

இந்தக் கடிதத்தைப் படித்துக் கொண்டிருக்கும்போதே சாமா வந்து சேர்ந்தார். சாமாவைப் பார்த்தவுடன் ராஜூவுக்கு உலகமே சுழலுவது போலிருந்தது. தலையில் ஏதோ தாக்கியது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அப்படியே மூர்ச்சித்து விட்டார்.

* * *

நடந்தபடி சம்பவத்தைச் சொல்லிவிட்டு “இப்பொழுது என்ன சொல்லுகிறீர். ஜோஸியர்களைப் பிடித்துச் சிறையில் போடவேண்டுமா இல்லையா?” என்று கேட்டார் சாமா.

“அவசரப்படாதீர். ஜோஸியரைக் கூப்பிட்டு ராஜூதானே காலபலன் பார்க்கச் சொன்னார்? ஜோஸியரே ராஜூவைத் தேடி வந்து பலன் சொல்லவில்லையே! அவருடைய ஏமாளித்தனத்தினால் உங்கள் பணத்துக்கு கஷ்டம் வந்ததே ஒழிய அதற்காக ஜோஸியத்தைக் குறை கூறுகிறீர்கள். நீங்கள் ஜமீன்தாரை ஏமாற்றவேண்டும் என்று பார்த்தீர்கள். ஜமீன்தார் உங்களை ஏமாற்றியிருக்கிறார்” என்றார் சுந்தரம்.

“ஆமாம் நீங்கள் சொல்லுவதும் உண்மைதான். நாங்கள் உண்மையோடு நடந்து கொண்டிருந்தால் எங்களுக்கு இந்த கஷ்டம் வந்திருக்காது. நியாயம் என்பது இரண்டு கட்சிக்கும் பொதுதானே? காலம் கெட்டுப் போகவில்லை. மனிதர்கள்தான் கெட்டுப் போய் விட்டார்கள்” என்று சொல்லிக் கொண்டே சென்றார் சாமா.

"அது சரிதான். தைரியமாகப் பணத்தைக் கொடுத்துவிட்டு கையை வாங்குவதற்கு ஜாதகம் பார்ப்பானேன்?"

"ஜாதகத்தில் நமது காலம் சரியில்லை என்றால் இந்த வியாபாரத்தை ஒத்திப் போட்டு விடுவோம். இதில் உங்களுக்கு ஒன்றும் ஆட்சேபனை இல்லையே?" என்றார்.

"எனக்கு சேட் பணம் கொடுத்த பிறகுதான் இந்த வியாபாரத்தைச் செய்யவேண்டும் என்று தோன்றுகிறது. பிறகு உங்கள் இஷ்டம்" என்று சொல்லிவிட்டுச் சும்மா இருந்து விட்டார் சாமா.

ஜோஸியர் தம் கைவரிசையைக் காண்பிக்க ஆரம்பித்து விட்டார். சூரியன் சந்திரனைப் பார்த்தான். சந்திரன் புதனைப் பார்க்க ஆரம்பித்தான். புதன் சனிக்குப் போனான். சனி ராகுவை எட்டிப் பார்த்தான். ராகு ஆகாயத்தைப் பார்த்தான், ஆகாயம் பூமியைப் பார்த்தது. ஜோஸியர் ராஜுவைப் பார்த்தார், ஒரு பத்து ரூபா யாவது கழலுமா என்று. ராஜு சாமாவைப் பார்த்தார். சாமா இதையெல்லாம் பார்க்கச் சகிக்காமல் கண்ணை மூடிக் கொண்டார்.

ஜோஸியர் ராஜுவைப் பார்த்து, "நேற்றிலிருந்துதான் உங்களுக்கு யோக காலம் பிறந்திருக்கிறது. சனி திசையிலே சுக்கிரபுத்தி ஆரம்பம். ராஜயோகம் என்று கூடச் சொல்லலாம். தாங்கள் எதை ஆரம்பித்தாலும் அது விருத்தியாகும். புதையல் கிடைக்க வேண்டிய வேளை. சுக்கிரன் லாபஸ்தானத்தில் இருக்கிறான். ஆகையால் நீங்கள் ஏதாவது வியாபார சம்பந்தமாகக் காரியம் செய்தீர்களானால் அது ஒன்றுக்கு நூறாகப் பெருகும்" என்று ஒரு பிரசங்கமே செய்து முடித்தார்.

ராஜுவுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. சாமாவைப் பார்த்தார். சாமா முகத்தைக் கடுமையாக வைத்துக்கொண்டு "நான் சொல்லுவதைவிட இந்த ஜோஸியர் சொல்லுவது உமக்கு உயர்வாகப் போய் விட்டது. நாளைக்கு ஒன்று ஆனால் இந்த மனிதர்தானா தாங்கப் போகிறார்! எப்படியோ உம் இஷ்டம் போல் செய்யும்" என்று சொல்லிவிட்டு எழுந்து போய்விட்டார்.

ராஜு சாமாவின் கோபத்தைக் கொஞ்சங்கூட லட்சியம் செய்யவில்லை. நாளைக்கு இரும்புப் பெட்டியில் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் வரும்போது சாமாவின் மனது மாறிவிடும் என்று தீர்மானித்துக் கொண்டு ஒரு பத்து ரூபாய் நோட்டை ஜோஸியரிடம் கொடுத்து அனுப்பினார்.

சாயங்காலம் வந்தது. ஜமீன்தாரும் வைர மாலையுடன் வந்து சேர்ந்தார். ராஜு இரும்புப் பெட்டியைத் திறந்து அதிலிருந்து ஐயாயிரத்து ஐந்நூறு ரூபாய் (தரகுக் கூலி போக) எடுத்து ஜமீன்தாரிடம் கொடுத்தார். ஜமீன்தாரும் சந்தோஷத்துடன் பணத்தைப் பெற்றுக் கொண்டு வைரமாலையைக் கொடுத்துவிட்டு "ரொம்ப வந்தனம்!" என்று கூறிச் சென்றார்.

கடிகாரம் சுற்றிக் கொண்டிருந்தது. பூமி சுழன்று கொண்டிருந்தது. பகற்பொழுது கழிந்து இரவு வந்தது. பிறகு பொழுது விடிந்தது. ராஜு தம்முடைய ஜாதகத்தில் இன்று யோகம் பிறந்தது என்று நினைத்துத் திருப்தி யடைந்தவராய்க் கடைக்குச்



சைக்கிள் காரர் :—மோட்டார் காரர் தான் தவறான வழியில் வந்து என் சைக்கிள் மேலே மோதினார்!

போலீஸ்காரர் :—பிசகு உங்கள் மேலேதான், ஸார்! பேசாமல் என்னோடு வாருங்கள்!

சைக்கிள் காரர் :—ஏன்?

போலீஸ்காரர்:—ஏனா? இவருடைய தகப்பனார் ஜில்லா ஜட்ஜ், இவர் அண்ணா ஐ. ஸி. எஸ். ஆபீஸர், இவர் மைத்துனன் டிபுடி கலெக்டர், இவருக்கு ஒரு எம். எல். ஏ. பெண்ணைக் கொடுத்திருக்கிறார் ... அப்புறமும் உங்கள் மேல் பிசகு இல்லை என்கிறீர்களா?

சொல்லியிருக்கிறேன். காலையில் வந்து விடுங்கள்!" என்றார் ராஜு.

"ஆகட்டும்" என்று சொல்லிச் சென்றார் சேட்.

* * *

மறுநாள் ராஜுவும் கடைக்கு வந்தார். கொடுக்கூர் ஜமீன்தாரும் வைர மாலையுடன் வந்திருந்தார். கொஞ்ச நாழிகைக்கெல்லாம் சேட்டும் வந்து சேர்ந்தார்.

"நான் என்னுடைய நகையை விற்பது எனக்கே சங்கோசமாக இருக்கிறது. ஆகையால் நீங்களே எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லி வைர மாலையைக் கொடுத்து விட்டு வேறு ஒரு அறையில் போய் உட்கார்ந்து கொண்டார் ஜமீன்தார்.



ராஜு வைர மாலையை எடுத்து வந்து சேட்டிடம் காண்பித்தார். சேட் வைர மாலையை ஆயிரம் கோணத்தில் பார்த்தார். கண்களை அகலத் திறந்து பார்த்தார், கண்ணை மூடிக் கொண்டு பார்த்தார். கடையில் பூதக் கண்ணாடி மூலமாகவும் வைரங்களைப் பார்த்து விட்டு "தேவலாம், விலை என்ன சொல்லுகிறார்?" என்று கேட்டார்.

"விலைதான் எனக்குப் பிடித்தமாயில்லை. ஜமீன்தார் தம்முடைய ஜமீன் விலையைச் சொல்லுகிறார் இதற்கு" என்றார் ராஜு.

"என்ன ஏழாயிரம் கேட்பாரா?"

"இன்னும் கொஞ்சம் அதிகம் கேட்கிறார்."

"அனுவசியமாகப் பேரம் வேண்டாம். ஏழாயிரம் என்றால் முடித்து விடுங்கள். அதற்குமேல் வேண்டாம். வைரத்தின் மதிப்பு நமக்குத் தெரியாதா என்ன?" என்றார் சேட்.

"அவரிடம் சொல்லிப் பார்க்கிறேன். இப்பொழுதே முடித்து விடலாமா?" என்றார் ராஜு.

"இல்லை, நாளைக்கு முடித்துவிடலாம்!"

"அப்போ நாளை வந்து விடுகிறீர்களா?"

"நாளைக்குக் காலையில் ஏழாயிரம் ரூபாயோடு வந்து விடுகிறேன். அதற்கு அச்சாரமாக இந்தாரும் நூறு ரூபாய்" என்று சொல்லி ஒரு நூறு ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்து விட்டுக் கிளம்பினார் சேட்.

சேட் சென்றவுடன் ராஜு ஜமீன்தாரிடம் சென்று "தாங்கள் சொன்னது போலவே ஆறாயிரத்துக்கு முடித்து விட்டேன். நாளைக்குப் பணத்துடன் வருவதாகச் சொல்லிச் சென்றிருக்கிறார். நாளைக்கு வாருங்கள் முடித்து விடலாம்" என்றார்.

"நாளைக்குப் பணம் கிடைப்பதென்றால் நான் நகையை விற்கவேண்டிய அவசியமே இல்லை. இன்றைக்கே வருவதாயிருந்தால் பாரும்" என்றார் ஜமீன்தார்.

ராஜுவுக்கு ஒன்றும் தோன்றவில்லை. சுளையாகக் கிடைக்கும் ஆயிரம் ரூபாயை விடவும் மனதில்லை. ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவர்போல "சாயங்காலம் வாருங்கள் பணத்தைக் கொடுத்து விட்டு நகையை வாங்கிக் கொள்கிறேன்" என்றார்.

"ஆறாயிரத்துக்கு ஒரு காசு குறைந்தாலும் விற்கவேண்டாம். நான் உங்களுக்கு ஐந்நூறு ரூபாய்த் தரகு கொடுத்து விடுகிறேன். என்னிடம் ஐயாயிரத்து ஐந்நூறு ரூபாய் கொடுத்தால்கூடப் போதும்" என்று சொல்லிவிட்டுச் சென்றார் ஜமீன்தார்.

ஜமீன்தார் சென்றவுடன் ராஜு அவசரம் அவசரமாக ஒரு ஜோஸ்யரை வரவழைத்தார். "ஐயா, ஜோஸ்யரே! இப்பொழுது எனது காலபலன் எப்படி இருக்கிறது பாரும்" என்று சொல்லித் தம்முடைய ஜாதகத்தைக் கொடுத்தார்.

அதற்குள் அங்கிருந்த சாமா "இப்பொழுது எதற்குக் காலபலனைப் பார்க்கிறீர்? காலம் எல்லாம் ஒழுங்காகத்தான் இருக்கிறது. அந்த சேட் பணத்தைக் கொடுத்தவுடன் நகையை வாங்கினால் போதும். இல்லாவிட்டால் இந்த வியாபாரமே செய்யவேண்டியதில்லை. ஜமீன்தாரிடம் இன்றைக்குக் கண்டிப்பாய் முடியாது என்று சொல்லிவிடும்" என்றார்.

"சாமா! நீங்கள் என்ன இப்படிப் பேசுகிறீர்கள்? தரகு வியாபாரமே இப்படித்தான். தைரியமாகத்தான் இறங்கவேணும்."

தார். பூதக்கண்ணாடி மூலம் பரிசோதித்துப் பார்த்தார். கடைசியில் முகத்தை ஒரு மாதிரியாக வைத்துக்கொண்டு "வைரமெல்லாம் அப்படி ஒன்றும் உயர்த்தாக இல்லை. என்ன விலை வந்தால் கொடுத்து விடலாம்?" என்று கேட்டார்.

"என்ன விலை என்று நான் நிச்சயம் செய்யவில்லை. நான் இதை எழாயிரம் ரூபாய்க்கு வாங்கினேன். அதிகம் கஷ்டப் படக்கூடாது என்பதற்காகத்தான் உங்களை நாடி வந்தேன்" என்றார்.

"என்னால் முடிந்த வரையில் பார்க்கிறேன்" என்றார் ராஜு.

"சரி; நான் உங்களை எப்பொழுது வந்து பார்க்கட்டும்?" என்று கேட்டார் ஜமீன்தார்.

"இரண்டு வாரமாக இது மாதிரி வைர மாலை ஒன்று வேண்டுமென்று ஒரு மனிதர் கேட்டுக் கொண்டிருக்கிறார். அவர் இன்று சாயங்காலம் வருவார். நீங்களும் சாயங்காலம் வந்தால் அவரிடம் வைர மாலையைக் காண்பித்து இரண்டில் ஒன்று முடித்து விடலாம்."



"எனக்குச் சாயங்காலம் கொஞ்சம் வேலையிருக்கிறது. நாளைக்குக் காலையில் பன்னிரண்டு மணி சுமாருக்கு வருகிறேன். அவரையும் நாளைக்கே வரச் சொல்லுங்களேன்!"

"அப்படியே வரச் சொல்லுகிறேன். விலை விஷயத்தைப் பற்றி..." என்று இழுத்தார் ராஜு.

"விலை, என்ன விலை? நான்தான் வாங்கிய விலையைச் சொல்லி விட்டேனே! வந்த வரையில் பாருங்கள்" என்றார் ஜமீன்தார்.

"அப்படிச் சொல்லக் கூடாது. நீங்கள் ஒரு அளவு சொல்லி விட்டால் நான் பேரம் பேசச் சௌகரியமாக இருக்கும்."

"ஆறாயிரத்து ஐந்நூறு வருமா என்று பாருங்கள். இல்லாவிட்டால் ஆறாயிரத்து இருநூற்று ஐம்பதுக்கே முடித்துவிடுங்கள்" என்றார் ஜமீன்தார்.

"அது ரொம்ப ஜாஸ்தி. இப்பொழுதெல்லாம் வைரத்தின் மவுசே குறைந்து போய்விட்டது. பண நெருக்கடி பாருங்கள். அவ்வளவு தூரம் ஓடாது!"

"அதெல்லாம் எனக்கு ஒன்றும் தெரியாது. நீங்கள் எவ்வளவுக்கு வேண்டுமானாலும் விற்றுக் கொள்ளுங்கள். எனக்கு முழுசாக ஆறாயிரம் கொடுத்து விட்டால் சரிதான்" என்றார் ஜமீன்தார்.

"ஆறாயிரம் ரொம்ப ஜாஸ்தி. ஐயாயிரமே அதிகம் என்று நினைக்கிறேன்" என்று கத்தி வளைத்துச் சொன்னார் ராஜு.

"ஐயாயிரத்துக்கு விற்பதாயிருந்தால் நானே விற்று விடுவேனே! கூட ஐந்நூறு ஆயிரம் வரும் என்றுதானே உங்களிடம் வந்தேன்?"

"இருந்தாலும்..."

"இருந்தாலும், என்ன ஸார், இருந்தாலும்? பாருங்களேன் வந்தவரையில், வேண்டுமானால் நூறோ இருநூறோ குறைத்துக் கொண்டால் போகிறது" என்று சொல்லிவிட்டு மறு நாள் வருவதாகப் போய் விட்டார் ஜமீன்தார்.

அவர் சென்ற பிறகு "ஜமீன்தார் ஏதோ பகல் கொள்ளை அடிக்க நினைக்கிறார். அவர் நினைப்பது எங்கே நடக்கப் போகிறது?" என்றார் சாமா.

"அதற்கு யார் எமாந்து இருக்கிறார்கள்? வைர மாலைக்கு ஆறாயிரம் வேண்டும் என்பது அவர் இஷ்டம். வருகிறவரிடம் சொல்லிப் பார்ப்போம். வாங்கிக் கொண்டால் வாங்கிக் கொள்ளட்டும். அதில் நமக்கு என்ன கஷ்டம்?" என்றார் ராஜு.

இந்தச் சமயத்தில் "மிஸ்டர் ராஜு இருக்கிறாரா?" என்று கேட்டுக்கொண்டே வந்தார் ஒருவர்.

"சேட்ஜியா! வாங்கோ, வாங்கோ. இப்பொழுதுதான் உங்களைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். உட்காருங்கள்" என்றார் ராஜு.

"அதிருக்கட்டும். வைரமாலை விஷயம் என்ன ஆச்சு. ஏதாவது கிடைக்குமா?" என்று கேட்டார் சேட்.

"தாங்கள் கேட்ட மாதிரியே ஒரு வைர மாலை வந்தது. நாளைக்குக் கொண்டு வரச்

# காலம் கெடவில்லை

பகீரதன்

"காலம் ரொம்பவும் கெட்டுப் போய் விட்டது. ஊரில் நியாயம், நீதி எல்லாம் அழிந்துவிட்டது. அக்கிரமம், அநியாயம்!"

"என்ன சாமா! போனவாரம் தேனாம்பேட்டை எக்ஸிபிஷனைப் பார்க்கப்போயிருந்தீரே, அப்போது அப்படியே கீழ்ப்பாக்கத்துக்கும் போய்விட்டு வந்தீரோ? ஒருமாதிரி பேசுகிறீரே!" என்று கேட்டுக் கடகடவென்று சிரித்தார் அவர் நண்பர் சுந்தரம்.

"உமக்கு எல்லாமே கேலிதான் ஐயா! இதோ பாரும். மனிதனுக்கு மனிதன் நாணயமாக நடந்துகொள்ளாவிட்டால் நாம் சுயராஜ்யம் பெற்றுப் பலனில்லை. அதிலும் இந்த ஜோஸியர்கள் இருக்கிறார்களே அவர்களைப் பிடித்துச் சிறையில் அடைக்கவேண்டும். அப்பொழுதுதான் இந்த நாடு உருப்படும். நேற்று நடந்த சம்பவத்தைக் கேட்டால் நான் சொல்லுவது அவ்வளவும் நியாயம் என்பீர்" என்றார் சாமா.

"அப்படி என்ன குடிமுழுகிப் போய் விட்டது? அதைத்தான் சொல்லுமே" என்றார் சுந்தரம்.

• • •

சாமாவும் அவர் மைத்துனர் ராஜுவும் சேர்ந்து ஒரு வியாபாரம் செய்துவந்தார்கள். அதாவது வைரங்கள் முதலியவை சம்பந்தமான தரகு வியாபாரம். கூடவே ஷராப் வியாபாரமும் உண்டு. நல்ல வருமானமும் வந்து கொண்டிருந்தது. ராஜு தரகு வியாபாரத்தையும் சாமா ஷராப் கடையையும் கவனித்து வந்தனர்.

என்றைக்கும் போல அன்றைக்கும் பொழுது புலர்ந்தது. ராஜுவும் வழக்கம் போலக் கடைக்கு வந்து தமது யதாஸ்தானத்தில் அமர்ந்து வியாபாரத்தைக் கவனித்து வந்தார். 'கிருங்...... கிருங்......' என்று டெலிபோனில் மணியடிக்கவே ரிஸீவரைக் கையிலெடுத்து "ஹலோ! யார் பேசுகிறது?" என்று கேட்டார் ராஜு.



"நான்தான் கொடுக்கூர் ஜமீன்தார் பேசுகிறேன். தாங்கள்தானே ஷராப் கடை ராஜு?"

"ஆமாம்; நான்தான் ராஜு. தங்களுக்கு என்ன வேண்டும்?"

"தங்களால் எனக்கு ஒரு காரியம் ஆக வேண்டும். என்னிடம் ஒரு வைர மாலை இருக்கிறது. அதை விற்றுக்கொடுக்க வேண்டும். திடீரென்று பணம் முடை ஏற்பட்டதால்தான் விற்கிறேன்."

"அதற்கென்ன, விற்றுத் தருகிறேன். வைர மாலையை எடுத்துக்கொண்டு நேரில் வாருங்கள்" என்று சொல்லி 'டக்'கென்று ரிஸீவரை வைத்தார் ராஜு.

அரை மணிக்கெல்லாம் ஷராப் கடை வாசலில் ஒரு பியூக் கார் வந்து நின்றது. அதிலிருந்து சில்க் ஜிப்பா அங்கவஸ்திரம் சகிதமாகத் தடபுடலுடன் ஒரு ஆசாமி இறங்கினார். இறங்கியதும் இறங்காததுமாக "ராஜு இருக்கிறாரா?" என்று கேட்டுக் கொண்டே கடையினுள் நுழைந்தார்.

"தாங்கள்தான் கொடுக்கூர் ஜமீன்தாரோ?"

"ஆமாம்."

"வாருங்கள், உங்களுக்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறேன்" என்று சொல்லி வரவேற்று உள்ளே அழைத்துக் கொண்டு போய் உட்கார வைத்தார் ராஜு. உடனே ஒரு கப் சூடான காப்பி வரவழைத்துக் கொடுத்து அவர் மனசைக் குளிரப்படுத்தினார்.

ஜமீன்தார் தாம் கொண்டு வந்திருந்த வைர மாலையை எடுத்து ராஜுவினிடம் கொடுத்து "இந்த வைர மாலையைப் போன வருஷம்தான் வாங்கினேன். திடீரென்று பணம் வேண்டியிருப்பதால்தான் விற்க வேண்டியிருக்கிறது" என்றார்.

ராஜு வைர மாலையை வாங்கி அப்படியும் இப்படியுமாக ஐந்து தடவை திருப்பிப் பார்த்-

வான் என்பதை அவனால் நம்ப முடிய வில்லை. ஜன்னல் வழியாகக் கமலியும் வாலி பனும் உல்லாசமாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான். தயக்கத்துடன் சூரி திரும்பிய போது, "யாரது வாசலில்?" என்று குரல் கேட்டது. கதவைத் திறந்து கொண்டு கமலி வந்தாள். "ஓ, நீங்களா? உள்ளே வாருங்கள்" என்றாள் அவள். சூரி தடுமாறிக் கொண்டே உள்ளே சென் றான். கமலி, உள்ளே யிருந்த வாலிபனைச் சுட்டிக் காட்டி, "இவர்தான் என் அகத் துக் காரர்" என்றாள். திடுக்கிட்டு நின் றான் சூரி. "ஸார், நீங்களே சொல்லுங்கள். ஜயித்தது நானா, அவளா? இவள் என் அக்காளுடன் சண்டை போட்டுக் கொண்டு வீட்டை விட்டு வந்துவிட்டாள். நான் அப் பொழுது ஊரில் இல்லை. திரும்பி வந்ததும் இங்கே வந்து எவ்வளவோ சமாதானம் சொல்லிக் கூப்பிட்டேன். 'அக்கா பணக் காரி. அவளை விரோதித்துக் கொள்ளக் கூடாது' என்று சொல்லிப் பார்த்தேன். 'அவள் பணம் அவளோடு இருக்கட்டும்' என்று சொல்லி என்னோடு வீட்டுக்கு வர மறுத்து விட்டாள். கடைசியிலே எதிர் பார்க்காதது நடந்தது. என்னை நாகபுரி சர்வகலாசாலையில் பெரிய உத்தியோகத் தில் நியமித்திருப்பதாக இன்று தந்தி வந்தது. இப்பொழுது என்னோடு நாகபுரிக்கு வருவதாகச் சொல்கிறாள். யார் கட்சி ஜயித்தது?" என்றான் அந்த வாலிபன்.

"அக்கா, உங்களுக்குக் கல்யாணமாக வில்லை என்று பொய் சொன்னேனே?" என்றாள் அப்பொழுது உள்ளே வந்த ஜெக்கி.

"ஆமாம். நான் சண்டை போட்டுக் கொண்டு வந்திருப்பது ஒருவருக்கும் தெரிய வேண்டாமென்றுதான் சொன்னேன்" என்றாள் கமலி தன் கணவனைப் பார்த்து.

"ஐயோ, பாவம்! அதை நிஜம் என்று நம்பி இந்த மாமா ஏமாந்துபோனார்" என்று யதார்த்தமாகச் சொல்லிவிட்டாள் ஜெக்கி.

சூரி கோபாவேசத்துடன் அவளைப் பார்த்தான்.

"இவரைப் பார்த்ததிலேயிருந்து உங்கள் தங்கை ஜயத்தை இவருக்குக் கொடுக்க ணும்னு எனக்கு ஆசை" என்றாள் கமலி.

"ஓ! பேஷாக!" என்று ஆமோதித் தான் கமலியின் கணவன்.

இப்பொழுது சூரி ஜெக்கியைக் கோபத் துடன் பார்க்கவில்லை. அடுத்த மாதம், கல் யாணப் பந்தலில் சூரியின் அங்கவஸ்திரத்தை ஜயத்தின் சிப்பனுடன் ஜெக்கி முடிந்திருந் ததை யாராலும் அவிழ்க்க முடியவில்லை.

வீட்டுக்கு வந்து எவ்விதமான தொந்தரவும் கொடுக்க வேண்டாம்.

கமலி''

தூக்கிவாரிப் போட்டது சூரிக்கு. அவன் நினைத்தது அவ்வளவும் சரிதான்.

இந்தச் சமயத்தில் எதிர்வீட்டுக்கு எதிரில் ஒரு கார் வந்து நின்றது. காரிலிருந்து ஒரு வாலிபன் இறங்கி எதிர் வீட்டுக்குள் சென்றான். "அதோ அந்த மாமாதான்" என்று கூறிக்கொண்டே கடிதத்தை வாங்கிக் கொண்டு ஓடினான் ஜெக்கி. வீடு பூட்டியிருந்ததைப் பார்த்து ஏமாற்றத்துடன் திரும்பினான் அந்த வாலிபன். அவன் காலு விரலிலும் காலு மோதிரம் மின்னியது. சேலம் வேஷ்டி, ஸில்க் ஜிப்பா, சரிகை அங்கவஸ்திரம், அழகாக வாரி விடப்பட்ட கிராப் சகிதமாக விளங்கினான். ஜெக்கி தன்னிடம் கொடுத்த கடிதத்தை வாங்கிப் படித்தான். பிறகு, அந்தக் கடிதத்தின் பின்னாலேயே ஏதோ எழுதி, ஜெக்கியிடம் கொடுத்து, "குழந்தை! அவா வந்தவுடனேயே இதைக் கொடுத்துவிடு. வேறு யார் கிட்டயும் கொடுக்காதே" என்றான். மறு விநாடி காரில் உட்கார்ந்து கொள்ளவே, காரும் பறந்து சென்றது.

"ஜெக்கி, ஜெக்கி! இன்றைக்கு 'ஸ்வீட்' வாங்கிக் கொண்டு வருவேன். பாதம் ஹல்வா. பர்பி, ஜிலேபி......" என்றான் சூரி. ஒவ்வொரு பட்சணத்துக்கும் ஒரு அடி எடுத்து வைத்து ஜெக்கி அவன் அருகில் வந்தான்.

சூரி, அக்கடிதத்தைப் பின்வருமாறு படித்தான்.

"ஆருயிர்க் காதலி கமலிக்கு.

நான் பலவந்தமாக என் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள விரும்பவில்லை. நான் சொல்வதைக் கேட்காவிட்டால் உனக்கு என்ன தீங்கு நேருமென்று தெரியாது. சாயங்காலம் ஏழு மணிக்கு நான் உன்னைப் பார்க்கும்போது உன் முடிவான பதிலைத் தெரியப்படுத்தவும்.

சந்துரு''

"ஜெக்கி, அக்கா வந்தவுடன் கடுதாசைக் கொடுத்துவிடு" என்று ஜெக்கியை அனுப்பி விட்டு யோசனையில் ஆழ்ந்தான் சூரி.

• • •

சாயங்காலம் ஆறு மணிக்கெல்லாம் பாட்டியும் கமலியும் வீட்டுக்கு வந்துவிட்டார்கள். ஜெக்கி கொடுத்த கடிதத்தைப் பார்த்துவிட்டு, கமலி மிகுந்த பரபரப்பு அடைந்திருப்பதைத் தெரிந்து கொண்டான் சூரி. இன்னும் ஒரு மணி நேரத்தில் அவன் வாழ்க்கையிலேயே மகத்தான சந்தர்ப்பம் வரப்போகிறது. திக்கற்ற ஒரு பெண்ணைப் பேராபத்திலிருந்து காப்பாற்றும் அரும் பெரும் பாக்கியம் அவனுக்குக் கிட்டப் போகிறது. நிலைமையைச் சமாளிக்க என்னென்ன செய்ய வேண்டுமென்பதை அவன் யோசித்து வைத்துவிட்டான்.

சரியாக ஏழு மணிக்குக் கார் வந்து நின்றது. அந்த வாலிபன் வேகமாக நடந்து உள்ளே போனான். உள்ளே என்ன நடக்குமோ என்று மூச்சைக் கையில் பிடித்துக் கொண்டு, ஒவ்வொரு விநாடியையும் எண்ணிக் கொண்டிருந்தான் சூரி. எதிர் வீட்டிலிருந்து ஏதாகிலும் கூச்சல், அலறல், அல்லது கதறல் கேட்கவேண்டியதுதான். உடனே பக்கத்திலுள்ள டெலிபோனுக்குப் போய்ப் போலீசாருக்குத் தெரிவிக்க வேண்டியது.

ஆனால் பத்துப் பதினைந்து நிமிஷங்கள் கழிந்தன. எதிர் வீட்டிலிருந்து சத்தம் ஒன்றையும் காணோம். கார் மட்டும் வாசலிலேயே நின்றது. ஏதேனும் விபரீதம் நடந்திருக்குமோ என்ற சந்தேகத்துடன் சூரி மெதுவாக எதிர் வீட்டை நோக்கிச் சென்றான். வாசற் கதவு உட்புறம் தாளிடப்பட்டிருந்தது. ஆனால் கமலியின் குரல் நன்றாய்க் காதில் விழுந்தது.

"சரிதான். உங்கள் கட்சி ஜெயித்தது. நான் தோற்றுப் போனேன்" என்றாள் கமலி மெல்லிய குரலில்.

தூக்கி வாரிப்போட்டவனாய் நின்றான் சூரி. கடைசியில் ஒரு பெண்—படித்த பெண், தன் உரிமைக்காகப் போராடக் கூடியவள்—இப்படிப் பணத்தையும் பயமுறுத்தலையும் கண்டு அடி பணிந்து விடு



போக வேண்டாம்' என்று சொல்லிவிட்டா. என் மாமா அப்படிச் சொன்னா?"

என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் சூரி விழித்துவிட்டு, "ஜெக்கி! கிணற்றங்கரையிலே அப்புறம் என்ன நடந்தது?" என்று கேட்டான்.

"அப்புறமா? என்னைக் கண்டதும் கமலி அக்கா, 'அடே டே! நீயா?' என்று சொல்லி விட்டுச் சட்டென்று என்னைத் தூக்கிக் கொண்டா. அப்போ அக்கா 'மடமட'வென்று சிரிச்சா. சித்த முன்னாடி அழுத அழுகை எங்கே மாமா போச்சு? அந்த மாமா என்னைப் பார்த்தவுடனே உள்ளே ஓட்டமாக ஓடிவந்து விட்டார்."

"அதற்கப்புறம் அந்த மாமா அடிக்கடி வந்தாரா?" என்று கேட்டான் சூரி.

"அடிக்கடி வருகிறார். வருகிறபோதெல்லாம் இறைஞ்சு பேசிக்கிறா. அந்த மாமா வீட்டுக்கு வருகிறது அக்காவுக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை என்று தெரிகிறது."

"உனக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டான் சூரி.

"அக்கா முகத்தை என்னமோ மாதிரி வைத்துக் கொள்கிறாள். 'ஏன் இங்கே வரே; போயிடு' என்று பாட்டி கத்தினாள்.



அந்த மாமா, 'மானம் போகிறது, கத்தாதீர்கள். போய் விடுகிறேன்' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். அப்புறம் அவர் வரவேயில்லை. காது விரலிலும் காது மோதிரம் போட்டுக் கொண்டிருக்கார். அந்த மாதிரி நீங்க என் மாமா, போட்டுக் கொள்ளவில்லை?"

"ஜெக்கி!" என்று உள்ளேயிருந்து அம்மா கூப்பிட்டாள். ஜெக்கி ஓட்டமாக ஓடிவிட்டாள் கையில் சாக்கலேட்டுடன்.

## 3

மறுநாள் ஞாயிற்றுக்கிழமை. அறையிலேயே தங்கிவிட்டான் சூரி. ஜன்னலைத் திறந்து வைத்துக்கொண்டு எதிர்வீட்டையே பார்த்துக்கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் கமலி வாசலில் வந்து சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு உள்ளே போய் விட்டாள். அவள் முகம் துக்கத்தில் ஆழ்ந்திருப்பதாகத் தோன்றியது. அழுது அழுது அவள் முகம் சிவந்திருப்பதாகவும் தோன்றியது. வேட்டையாடப்படும் மானை அச்சமயம் ஞாபக மூட்டினாள் கமலி. அவர்கள் வீட்டுக்கு அடிக்கடி வந்து தொந்தரவு கொடுத்துக் கொண்டிருப்பவன் யார் என்று தெரிந்து கொள்ள ஆவல் கொண்டான் சூரி. இவ்வளவு தைரியமாக அவர்கள் வீட்டுக்கு வந்து தன்னைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி கட்டாயப் படுத்துகிறவன் செல்வாக்குள்ள பெரிய பணக்காரனாக இருக்கவேண்டும்; அல்லது அ பந்துவாக இருக்கவேண்டும். யாராயிருந்தாலும் திக்கற்ற நிலைமையில் இருக்கிறாள் என்பதற்காக, ஒரு பெண்ணைக் கட்டாயப் படுத்த உரிமை கிடையாது என்றெல்லாம் எண்ணிக்கொண்டு படுத்திருந்தான் சூரி.

அப்பொழுது வாசற் கதவைப் பூட்டிக் கொண்டு பாட்டியும் கமலியும் வந்தார்கள். அவர்களுடன் உள்ளேயிருந்து ஜெக்கியும் வந்தாள். தாயும் பெண்ணும் ஒரு ரிக்ஷாவில் ஏறிக்கொண்டு போய் விட்டார்கள். ஜெக்கி அறைக்கு ஓடிவந்தாள்.

"மாமா, அக்கா ஒரு லெட்டர் கொடுத்தா, அதைப் பத்திரமா வச்சிருந்து அந்த மாமா வந்தால் கொடுக்கச் சொன்னா. அவா மைலாப்பூருக்குப் போயிருக்கா."

"எங்கே அந்த லெட்டர்? என் கண்ணல்லியோ?" என்று சொல்லிவிட்டு சூரி அதை வாங்கிப் படித்தான்.

"நீங்கள் அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வந்து கொண்டிருப்பது பலர் பலவிதம் பேசிக் கொள்ள ஏதுவாகிறது. இனி நீங்கள் எங்கள்

தென்று நடந்து உள்ளே சென்றாள். "என்னடீது? எல்லாத்தையும் என்கிட்ட சொல்லுடி!" என்று கேட்டுக் கொண்டே பின் தொடர்ந்தாள் தாயார். எதிர் வீட்டுப் பெண் நன்றியறிதலுடன் சூரியை ஒரு முறை பார்த்துவிட்டுச் சென்றுவிட்டாள். அன்று இரவு அவனுக்கு நல்ல தூக்கமில்லை.

## 2

மறுநாள் சனிக்கிழமை. ஒரு மணியுடன் ஆபீஸ் முடிந்து தன் அறைக்குத் திரும்பி விட்டான் சூரி. வரும்போது ஒரு 'சாக்லேட்' பொட்டணம் கொண்டு வந்தான். அவன் அறையைத் திறக்கும் சத்தம் கேட்டதுமே ஜெக்கி ஓட்டமாக ஓடி வாசல் திண்ணைக்கு வந்து விட்டாள்.

"ஜெக்கி! இந்தா சாக்லேட்" என்று அவளிடம் கொடுத்தான் சூரி.

"எவ்வளவு சாக்லேட், மாமா! இவ்வளவையும் எப்படித் தின்கிறது?" என்றாள் ஜெக்கி.

"இப்பொழுதே தின்பதற்காகக் கொடுக்கவில்லை. கொண்டுபோய் வைத்துக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாகத் தின்ன வேண்டும்......ஆமாம். ஒரு சமாசாரம் உன்னைக் கேட்கணும், இங்கே வா!" என்றான் சூரி.

ஜெக்கியும் அவனருகில் உட்கார்ந்து கொண்டாள். "எதிர்த்த அகத்திலே இருக்கிற அக்கா யாரு?" என்று அத்தனை நேரமாய்க் கேட்க நினைத்த கேள்வியைக் கேட்டான்.

"அந்த அக்கா பேரு கமலி; எங்க பள்ளிக்கூடத்து வாத்தியார். பெரிய கிளாஸுக்கெல்லாம் பாடம் சொல்லித் தரா. என் மேலே அக்காவுக்கு ரொம்ப ஆசை" என்று 'மட மட' வென்று சொல்லிக் கொண்டு போனாள். "அப்ப உன்னை அவா ஆத்துக்குப் போக வேண்டாம்னு ஏன் உங்க அம்மா சொன்னா?" என்று அவன் மனதை அரித்துக் கொண்டிருந்த கேள்வியைக் கேட்டான் சூரி.

"அக்கா அகத்துக்கு முந்தியெல்லாம் போவேன். யாரோ யாரோ மாமாவெல்லாம் அங்கே அடிக்கடி வரா. அவா எல்லாம் வந்தால் அம்மாவுக்கு என்ன மாமா? ஆகையாலே அம்மா அங்கே போகக் கூடாது என்று சொல்லிவிட்டாள்."

சூரி புருவத்தை நெரித்துக் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்தான். "யார் யாரோ மாமாவெல்லாம் அடிக்கடி வரா" என்ற குழந்தை மொழியில் தொக்கி நின்ற மறை பொருளை ஊகித்துக் கொண்டதும் ஆச்சரியமும் திகைப்பும் ஒருங்கே அடைந்தான். சே, சே! இப்படியும் இருக்குமா? பார்ப்பதற்கு அந்தப் பெண் கௌரவமாகத்தானே தோன்றுகிறாள்!

"ஜெக்கி, அவா இந்த வீட்டுக்கு வந்து எத்தனை நாளாகிறது?" என்று கேட்டான் சூரி.

"ஒரு மாசந்தான் இருக்கும் மாமா!"

"அவா அகத்திலே இன்னும் யார் யாரு எல்லாம் இருக்கா?"

"அக்காவும் பாட்டியும்தான். அக்காவுக்கு இன்னம் கல்யாணமாகவில்லை" என்றாள் ஜெக்கி.

"உனக்கு எப்படித் தெரியும்?" என்றான் சூரி ஆவலுடன்.

"அம்மாதான் சொன்னா. அந்தப் பாட்டி எப்பப் பார்த்தாலும் 'சிடு சிடு' வென்று எரிந்து விழுகிறாள், மாமா! ஆனால் என்கிட்ட மட்டும் பாட்டி கோபித்துக் கொள்கிறதே இல்லை" என்றாள் குழந்தை பெருமையுடன்.

"உங்க அம்மா அக்காவோடு பேசுகிறதே இல்லையா?"

"முந்தியெல்லாம் அக்கா எங்க அகத்துக்கு வந்து அம்மாவோடே பேசிக் கொண்டிருப்பாள். ஒருநாள் நான் அம்மாவோடே கோவிலுக்குப் போய் மாவிளக்குப் போட்டு விட்டு வந்தேன். வந்ததும், ஒரு கிண்ணத்திலே மாவிளக்கு மாவைக் கொடுத்து, 'கமலி அக்காகிட்ட இதைக் கொடுத்துட்டு வா' என்று அம்மா சொன்னாள். நான் கிண்ணத்தை எடுத்துக் கொண்டு எதிராத்துக்கு ஓடினேன்."

"அப்பொழுது நல்ல வேளையாக சைக்கிள் வரவில்லை போலிருக்கு" என்றான் சூரி.

"கமலி அக்கா கூடத்திலே இல்லை. கிணற்றங்கரைப் பக்கம் போனேன். அப்போ யாரோ ஒரு மாமா கமலி அக்கா கையைப் பிடித்துக் கொண்டு நின்று கொண்டிருந்தார். 'கையை விடுங்கோ' என்று கையை எடுத்துக் கொண்டாள் அக்கா. அந்த மாமா சிரிச்சுண்டே அக்கா கன்னத்தைக் கிள்ளப்போனார். அக்கா 'ஓ' வென்று முகத்தைத் திருப்பிண்டு அழுதாள். நீங்களே சொல்லுங்கோ, மாமா...சிரிச்சுண்டே யாராவது கிள்ளுவாளா? வேடிக்கைக்காகக் கிள்ளினால் யாராவது அழுவாளா?.........அகத்துக்கு வந்து அம்மாக்கிட்டக் கேட்டேன். 'சரி, சரி! இனி மேல் கண்ட கழுதைகள் அகத்துக்குப்

# பொல்லாத ஜெக்கி

வி. எஸ். ஆர்.

சூரிய நாராயணன் தூத்துக்குடியிலிருந்து சென்னைக்கு மாற்றப்பட்டு ஒரு வாரம்தான் ஆகியிருந்தது. புரசைவாக்கம் வெள்ளாளத் தெருவில் ஒரு வீட்டுத் திண்ணையில் ஒரு சிறு அறை அவனுக்கு வாடகைக்குக் கிடைத்தது. ஸ்நானபானங்களுக்கு மட்டும் வீட்டுக்குள்ளே சென்று முற்றத்திலிருந்த குழாயை உபயோகப்படுத்திக் கொள்ளலாம். பிரும்மசாரிக் கட்டையான சூரி ஒன்பது மணிக்கெல்லாம் தன் காரியங்களை முடித்துக்கொண்டு அந்த காக்கி 'யூனிபார்மை'ப் போட்டுக்கொண்டு 'ஜம்'மென்று சைக்கிளில் கிளம்பி விடுவான். வரும் வழியில் சாப்பிட்டுவிட்டு 'டாண்' என்று பத்து மணிக்கு ஆபீசுக்கு வந்துவிடுவான். அவன் வேலை பார்த்து வந்த 'சுங்க வரி ஆபீஸ்' பிராட்வேயிலிருந்தது. சாயங்காலம் ஐந்து மணிக்கெல்லாம் ஆபீசிலிருந்து கிளம்பி விடுவான். அறைக்கு வந்து, ஸ்நானம் செய்துவிட்டு வெள்ளை ஜிப்பாவைத் தரித்துக்கொண்டு உலாவப்போவான். எழும்பூர் 'ஸ்பர்டாங்'கிலுள்ள மேயர் சத்தியமூர்த்தி பார்க்குக்கு வந்து ஏழு மணிவரை உட்கார்ந்திருப்பான்.

அன்று சூரி உலாவப் போவதற்காக குஷாலாகச் சீட்டியடித்துக் கொண்டு அறைக் கதவைப் பூட்டிக் கொண்டிருந்த போது எதிர்வீட்டு வாசலிலிருந்து 'ஜெக்கி! ஜெக்கி!' என்று யாரோ கூப்பிடும் குரல் கேட்டது. 'ஜெக்கி' என்பது, சூரி குடியிருந்த வீட்டுக்காரரின் ஏழுவயதுக் குழந்தை ஜானகி. 'ஜெக்கி'யைக் கூப்பிட்டது யார் என்று பார்க்க சூரி திரும்பினான். ஒரு பலூனைக் கையில் வைத்துக்கொண்டு எதிர் வீட்டு வாசலில் ஒரு வனிதை நின்றுகொண்டிருந்தாள். அவளையே பார்த்துக்கொண்டு கண்கொட்டாமல் ஒரு நிமிஷம் நின்றான் சூரி. அவள் கையில் இருந்த ரோஜா வர்ண பலூனுக்கும் அவள் முகத்தின் வர்ணத்துக்கும் அதிக வித்தியாசம் இல்லை. மற்றபடி அவள் தேகம் காற்றில் அசைந்தாடும் பலூனைப் போலில்லாமல் காற்றில் அசைந்தாடும் பூக்கொடியைப் போலவே விளங்கியது. அவளுக்கு வயது இருபதுதான் இருக்கும். குறுகுறுப்பான அழகிய முகத்திற்கு அந்தப் புன்னகை அலாதியான சோபையை அளித்துக் கொண்டிருந்தது. சட்டென்று அவள் சூரியைப் பார்த்து விட்டாள். அந்தப் புன்னகை வெட்கத்தில் மறைந்துகொள்ள, உள்ளே போய் விடுவதற்குத் திரும்பினாள்.

"இதோ வந்துட்டேன், அக்கா!" என்று உள்ளேயிருந்து கத்திக்கொண்டே விஷமக்கார ஜெக்கி வாசலில் ஓடினாள். 'வீல்' என்ற சத்தம், 'ஐயோ' என்ற கூச்சல். 'டபார்' என்ற சத்தம்! சூரி ஒரே தாவாகத் தாவித் தெருவில் போய்க் கீழே கிடந்த ஜெக்கியைத் தூக்கினான். நல்ல வேளை, அதிகமாக அடிபடவில்லை. முழங்கையில் மட்டும் சிறுகாயம், ஜெக்கியைக் கீழே தள்ளிய சைக்கிள் சற்று தூரத்தில் சைக்கிள்காரருடன் பின்னிக்கொண்டு கிடந்தது. பக்கத்திலிருந்தவர்கள் சைக்கிள்காரரைத் தூக்கிக் கொண்டிருக்கும்போது சூரி ஜெக்கியைத் தூக்கிக்கொண்டு தன் அறைக்கு வந்தான்.

"நான்தான் பலூனைக் காட்டிக் குழந்தையைக் கூப்பிட்டேன்" என்று கூறிக்கொண்டே கலங்கிய கண்களுடன் எதிர் வீட்டுப் பெண் அவன் பின்னால் வந்தாள். அவள் கையிலிருந்த பலூன் கீழே நழுவி விழுந்தது. "அக்கா! அதைச் சொல்லாதேங்கோ. அம்மா கோபித்துக் கொள்வாள். ஏற்கெனவே உங்க ஆத்துக்குப் போகப்படாதுன்னு அம்மா சொல்லியிருக்கா. மாமா, நீங்களும் எங்க அம்மாக்கிட்டச் சொல்லாதேங்கோ!" என்றாள் சூரியின் கையில் இருந்த ஜெக்கி. அப்பொழுதே அந்தக் குழந்தை ஒரு சிறு வார்த்தையால் மூவரையும் பிணைத்து விட்டதாகக் கருதினான் சூரி.

சமையற்கட்டிலிருந்த ஜெக்கியின் தாயார் வாசலில் ஏதோ சத்தத்தைக் கேட்டு, ஓடிவந்தாள். அப்பொழுது சூரி, தன்னிடமிருந்த 'முதல் உதவிப் பெட்டி'யிலிருந்து மருந்தை எடுத்து, ஜெக்கியின் கையில் 'பாண்டேஜ்' போட்டுக் கொண்டிருந்தான். "ஐயோ, என்னடி அம்மா! நான் என்ன பண்ணுவேன்?" என்று கத்தினாள் ஜெக்கியின் தாயார். அதற்குள் 'பாண்டேஜ்' போட்டாகி விடவே, சட்டென்று ஜெக்கி எழுந்திருந்து, "ஒன்றுமில்லேயம்மா! வாசலில் சைக்கிள் மேலே மோதி தரை உடைத் தெறித்து விட்டேன்" என்று விஷமச் சிரிப்புடன் சொல்லிவிட்டு 'விசுக்' 'விசுக்'



மாயவரம் பிரசங்கதார் ஸ்ரீ எம். என். பொன்னுசாமி ஐயர் 'குடியரசு' தினத்தில் மகாத்மா காந்தியின் உருவச் சிலையைத் திறந்து வைத்த வைபவம். அன்று குடியரசுத் திருவிழாவை முன்னிட்டு 5,000 குழந்தைகளுக்கு ஸ்ரீ பொன்னுசாமி ஐயர் மிட்டாய்கள் வழங்கினர்.

---

"என்ன அது? தாராளமாகச் சொல்!"

"தயவு செய்து என் பெயரை பிரேமலதா என்றோ, இந்திர குமாரி என்றோ மாற்றிவிடுங்கள். அதேபோலக் கொத்தமல்லித் தேவனின் பெயரையும் பிரேமநாத் அல்லது மோஹன் குமார் என்றோ மாற்றி விடுங்கள். சோமநாதன் பெயர் வேண்டுமானால் அப்படியே இருக்கட்டும்."

"ஏன் பெயர்களை அநாவசியமாக மாற்ற வேண்டும்?"

"இல்லை, இல்லை! ஆள் அழகாயிருந்தால் மட்டும் போதாது. பெயரும் அழகாயிருக்க வேண்டும். மோஹன்குமாரும் பிரேமலதாவும் காதலர்கள் என்றால் எவ்வளவு அழகாயிருக்கிறது! அதை விட்டு விட்டு சித்தமல்லிபுரம் கொத்தமல்லித் தேவனும் மந்தரகிரி சுந்தர காமாக்ஷியும் காதல் மணம் புரிந்துகொண்டார்கள் என்று சொல்லும் போதே வாயைக் கசக்கிறதே!"

"ஏன்? அழகான பெயர்கள் வைத்துக் கொள்கிறவர்கள்தான் சுகத்தை அடைய வேண்டுமோ? என் கொள்கை அதற்கு இடம் கொடாது."

"தயவு செய்து எனக்காக இந்த ஒரு தடவை மாத்திரம் மனது வையுங்கள்."

"முடியாது! சுக தேவர் ஒரு கொள்கையைக் கடைப்பிடித்தால் அதை மாற்றச் சர்வ வல்லமையுள்ள இந்தப் பேனாவினால்கூட முடியாது!"

உடனே ரௌத்திராகாரமாக அந்தப் பெண் இடத்தை விட்டு எழுந்தாள். அவர் மேஜைமேலுள்ள இங்கிப் புட்டியை கையில் எடுத்துக் கொண்டு, "முடியாதா? முடியாதா? இந்த இங்கி இல்லாவிட்டால் பேனா எப்படி எழுதும், பார்க்கிறேன்!" என்று சொல்லிவிட்டு அந்த இங்கிப் புட்டியை வீசி சுகதேவரை நோக்கி எறிந்தாள்.

'ஐயையோ! என் சொக்காய், வேஷ்டி யெல்லாம் இங்கியாய் விட்டதே!!" என்று தீனமாய் ஓலமிட்டார் சுகதேவர்.

• • •

"இந்தாருங்கள்! எழுந்திருங்கள்! பட்டப் பகலிலேயே பிதற்றுகிறீர்களே!" என்று கூறிக்கொண்டே உள்ளே நுழைந்த சுகதேவரின் மனைவி அவரைப் பார்த்தவுடனே விழுந்து விழுந்து சிரித்தாள். ஏனென்றால் மேஜையின் மேலேயே சாய்ந்து உறங்கிவிட்ட சுகதேவர் தூக்கக் கலக்கத்தில் இங்கிப் புட்டியைத் தட்டிவிட்டுத் தன் மேலெல்லாம் இங்கியைக் கொட்டிக் கொண்டு விட்டார்.

"என்ன! ஏதாவது கெட்ட சொப்பனம் கண்டீர்களோ? அந்த நல்லதங்காள் படத்தைத் தூக்கி எறியுங்கள் என்று நான் எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன். கேட்டால்தானே?" என்று அவர் மனைவி படபடப்பாகப் பேசினாள்.

"அந்த நல்லதங்காள் படத்தை நீயே தூக்கி எறிந்துவிடு. ஆனால் நான் கண்டது ஒருவிதத்தில் கெட்ட சொப்பனமாயிருந்தாலும் நல்ல கெட்ட சொப்பனம் தான்! ஏனென்றால் இந்த மாதத்திற்கு என்ன கதை எழுதுவதென்று தவித்துக் கொண்டிருந்த எனக்கு ஒரு நல்ல கதை அகப்பட்டது!" என்று சொன்னார் சுகதேவர் மிகவும் நிதானமாக.

• • •

அந்த மாதம் சுகதேவரின் கதையை ஆவலுடன் படித்த ஆயிரக்கணக்கான ரஸிகர்கள் ஏமாந்து போனார்கள். ஏனென்றால் முதல் தடவையாக சுகதேவர் ஒரு கதையை சுபமாக ஒரு கல்யாணத்துடன் முடித்திருந்தார்! 'வில்லனை'க் கூடக் கொல்லவில்லை. ஊரை விட்டுத்தான் ஓட்டியிருந்தார்!




ஆனால் நடைமுறையில் இது சாத்தியமல்லவே!"

"ஏன்?"

"கலகம் நடந்தால் அரசாங்கம் சும்மா பார்த்துக் கொண்டிருக்குமா? 'ட்யூயலி'ல் கொத்தமல்லித் தேவன் இறந்தால் கொலைக் குற்றம் சோமநாதனின் பேரில் தானே விழும்? அப்போது அவன் தூக்கு மேடை ஏற நேர்ந்தால் உன் கதி?"

"நான் பார்த்த சினிமாக்களில் அது மாதிரி 'வில்லனை'க் குத்திக் கொன்றவர் யாரும் தூக்கு மேடை ஏறினதாகத் தெரியவில்லையே! அதற்கு மாறாகக் கத்திச் சண்டையில் ஜயித்தவன்தான் அரசனாகிறான்."

"தாயே! சினிமாக் கதைகளை ஏன் பத்திரிகைக் கதைகளோடு ஒப்பிடுகிறீர்கள்? பத்திரிகைக் கதைகள் மிகவும் சாதுக்கள். காலவரம்பிற்கு உட்பட்டவை. ஆனால் சினிமாக் கதைகள் காலவரம்பிற்குக் கட்டுப்படாதவை. அவைகளின் ஒரே நோக்கம் பாமர ஜனங்களை......"

"அவைகளின் நோக்கத்தைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை. ஆனால் நான் கோரி வந்த உதவி......"

"அதைச் செய்யத் தயாராயிருக்கிறேன், ஒரு சில மாறுதல்களுடன். உன்னை மிராசுதாரின் மனைவியாகக்கூடச் செய்து விடுகிறேன். உன் பெற்றோர்களின் கஷ்டங்களைப் போக்கி விடுகிறேன்."

"எப்படி?"

"நீ சொன்னபடி பேனாவினால்தான்!"

"அதுதான் எப்படி என்று கேட்கிறேன்."

"சொல்லுகிறேன் கேள். முதலில் உன்னைப் பயமுறுத்திய கொத்தமல்லித் தேவனின் காலுவீசை மீசையை இதோ இந்தப் பேனாவினால் நறுக்கிச் சிறிய மீசையாகச் செய்துவிடுகிறேன். அவன் வயதையும் இருபத்துநாலாகக் குறைத்து கல்யாணமாகாதவனாகவும் செய்துவிடுகிறேன். அவனை மிகுந்த படிப்புள்ளவனாகவும் அழகுள்ளவனாகவும் மாற்றுகிறேன். ஏழைகளின் பங்காளியாகச் செய்துவிடுகிறேன். உனக்காக என்ன தியாகம் வேண்டுமானாலும் செய்யச் சொல்லுகிறேன்."

"அப்போது சோமநாதரின் கதி?"

"அது ஒன்றும் பிரமாதமில்லை! அவனையே 'வில்ல'னாக மாற்ற இந்தப் பேனாவினால் முடியும். கொத்தமல்லித் தேவனின் காலு வீசை மீசையில் அரும்பு மீசை போக பாக்கி உள்ள மீசையை அப்படியே சோமநாதனுக்கு ஒட்ட வைத்து விடுகிறேன். அவன் முகத்தைக் கூட இந்த ஊர் 'முனிஸிபாலிடி ரோட்' மாதிரி குண்டும் குழியுமாகச் செய்துவிடுகிறேன். ஊரில் மிகவும் பொல்லாதவனாகச் செய்துவிடுகிறேன். நீ தனியாக இருக்கும்போது அவன் உன்னைத் துராக்கிரகம் செய்ய நினைக்கும்போது கொத்தமல்லித்தேவனை விட்டு நன்றாக உதைத்து ஊரை விட்டே ஓட்டிவிடச் செய்கிறேன். எல்லாவற்றிற்கும் மேலாக உன்னைக் கொத்தமல்லித் தேவனிடம் அன்பு கொள்ளச் செய்யக்கூட இந்தப் பேனாவினால் முடியும்!"

"ஏன் இப்படியெல்லாம் மாற்றுகிறீர்கள்?"

"எல்லாம் உனக்காகத்தான். இவ்வளவு அழகுள்ள நீ ஒரு மிராசுதாரின் மனைவியாக இருப்பதுதான் நியாயம். உன் ஏழைப் பெற்றோர்களுக்காக நீ இதைச் செய்வதுதான் தருமம். அதை விட்டு விட்டு ஏழையான சோமநாதனைக் கல்யாணம் செய்து கொண்டு ஏன் மேலும் கஷ்டப்பட வேண்டும்?"

"நீங்கள் சொல்வதை ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் ஒரு வேண்டுகோள்."

கிறான். என் பெற்றோர்கள் ஏழைகள். அதனால் அவர்களும் என்னைக் கட்டாயப் படுத்துகிறார்கள்."

"அந்த மிராசுதாரின் வயது என்ன? அவன் ஏற்கெனவே விவாகமானவனா?"

"வயது முப்பது இருக்கும். போன வருடம்தான் அவனுடைய மனைவி இறந்து விட்டாள். இப்போது என்னை இரண்டாம்தாரமாகத்தான் மணந்து கொள்ள விரும்புகிறான்."

"அப்படியானால் உன் பெற்றோர்கள் சொல்வது நியாயம்தானே? உங்கள் ஊர் மிராசுதாரை மணந்து கொள்ள நீ பெரிய அதிர்ஷ்டமுள்ளவளாய் இருக்க வேண்டுமே? அப்படியிருக்க அவனைக் கல்யாணம் செய்து கொள்ள நீ ஏன் மறுக்கிறாய்?"

"ஏனா? அவனும் ஒரு மனிதனா? அவன் மீசையே நாலுவிசை இருக்குமே!"

"அவன் மீசைக்காக நீ அவனைக் கல்யாணம் செய்து கொள்ள மறுப்பது சரியான காரணமில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. அவனைக் கல்யாணம் செய்து கொண்டால் நீ சுகமாக வாழலாம். உன் பெற்றோர்களின் கஷ்டமும் விடியும்."

"அப்போது அவர் கதி?"

"எவர் கதி?"

"அதுதான் சோமநாதனின் கதி!"

"எந்த சோமநாதன்? ராமநாதபுரம் சோமநாதனா?"

"அவரை உங்களுக்கு எப்படித் தெரியும்? நீங்கள்கூட ராமநாதபுரத்தில் தான் பிறந்தவரா?"

"இல்லை! உன் பேரையும் ஊரையும் அந்த மிராசுதாரின் பேரையும் ஊரையும் கேட்ட பிறகு சோமநாதனின் ஊர் ராமநாதபுரம்தான் என்று எனக்குத் தெரியாவிட்டால் நான் இந்த உலகத்தில் எழுத்தாளனாக இருந்துதான் என்ன பயன்? அது சரி; அந்த ராமநாதபுரம் சோமநாதன் உனக்கு என்னவேண்டும்?"

"அவர்தான் என்.......ன்......"

"ஓஹோ! காதலன் என்று சொல்லக் கூடவா இந்தக் காலத்துப் பெண்ணாகிய உனக்கு வெட்கம்?"

"அவர் என் காதலர் மட்டுமல்ல. அவர் ஏழையாயிருந்தாலும், என் உள்ளங் கவர்ந்த கள்வர். அவர் 'களுக்' கென்று சிரித்தால் அவர் கன்னங்களில் வட்டமிடும் குழிகளை நாளெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம்!"

"அம்மணி! உங்களுக்கு நான் எந்த விதத்தில் உதவி புரிய வேண்டுமென்று நீங்கள் சொல்லவில்லையே?"



"இதோ சொல்லி விடுகிறேன்! நீங்கள் ராமநாதபுரம் சோமநாதனுக்கும் சித்த மல்லிபுரம் கொத்தமல்லித் தேவனுக்கும் ஒரு சண்டையை ஏற்படுத்தி, அதில் சோமநாதனை ஏவிக் கொத்தமல்லித் தேவனைக் கொன்றுவிடச் செய்யுங்கள். பிறகு நான் சோமநாதனை மணந்து கொள்வது எளிதாகிவிடும்!"

"நீ சுலபமாகச் சொல்லிவிட்டாய். ஆனால் ஒரு மனிதனைக் கொல்லத் தகுந்த காரணம் வேண்டாமா?"

"இது கூடவா எழுத்தாளராகிய உங்களுக்குச் சொல்லவேண்டும்? மிராசுதார் கொத்தமல்லித் தேவன் குடிஜனங்களை அநியாய வரிபோட்டு வாட்டுவதாகவும், ஜனங்கள் சோமநாதன் தலைமையில் எதிர்த்தெழுந்து கலகம் செய்வதாகவும், கடைசியில் சோமநாதனுக்கும் கொத்தமல்லித் தேவனுக்கும் ஒரு 'ட்யூயல்' நடப்பதாகவும் செய்துவிட்டால் சரியாய் விடும். முடிவில் என்னைச் சோமநாதனுடன் சேர்ப்பது உங்களுக்குக் கஷ்டமா? வேண்டுமானால் சோமநாதனையே மிராசுதாராக்கி விடுங்களேன்!"

"ரொம்பவும் பிரமாதமாயிருக்கிறதே. உன் யோசனையும் ஆசையும்!

# சகதேவரின் பேனா

எம். எஸ். எம்.

பிரபல சோக எழுத்தாளர் சகதேவர் சோகமே உருவெடுத்தாற் போலத் தன்னுடைய தனி அறையில் உட்கார்ந்திருந்தார். அவர் ஒரு பிரசித்தி பெற்ற மாதப் பத்திரிகையின் ஆசிரியர் குழாத்தைச் சேர்ந்தவர். அந்தப் பத்திரிகை அவருடைய சோக எழுத்துக்களாலேயே பிரபலமடைந்தது என்று சொன்னால் மிகையாகாது.

சகதேவரின் பேனாவிலிருந்து உருவடையும் சோக சித்திரங்கள் அடங்கிய பத்திரிகையை மாதந்தோறும் ஆயிரக்கணக்கான ரஸிகர்கள் கைக் குட்டையும் கையுமாகக் காத்திருந்து வாங்கிப் படித்து சோகமடைந்து ஆனந்தமடைவார்கள். முக்கியமாக, பெண்மணிகள் அவருடைய சோகக் கதைகளில் தோன்றும் கதாநாயகிகளின் கதியையும் விதியையும் நினைத்து நினைத்துப் பதினைந்து நாள் வரை அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக இருப்பார்கள். பாக்கிப் பதினைந்து நாள் கண்ணீரும் கம்பலையுமாகக் காலம் கழிப்பார்கள். இதற்குள் அடுத்த மாதப் பத்திரிகை சகதேவரின் சோக முத்திரையைத் தாங்கி வெளி வந்துவிடும். இதனால் ரஸிகர்களிடமிருந்து சகதேவருக்கு 'சோகச் சுவை அரசு' 'சோக வெடி' முதலிய பட்டங்கள் கிடைத்ததில் ஆச்சரியம் இல்லை.

சகதேவரின் அறையில் நுழைந்தால் நம் கண்களில் முதன் முதலாகக் காணப்படுவது நல்லதங்காள் தன் ஆறு குழந்தைகளையும் கிணற்றில் தள்ளிவிட்டு ஏழாவது குழந்தையைக் கிணற்றில் தள்ளப்போவதைச் சித்திரிக்கும் படம் தான். அதைப் பார்த்துத்தான் தனக்குக் கதை எழுதும் உணர்ச்சி உண்டாகிறது என்று அவர் அடிக்கடி தம் நண்பர்களிடம் சொல்வது வழக்கம்.

ஆனால் அன்று சகதேவர் சுமார் ஒரு மணி நேரம் அந்தப் படத்தைப் பார்த்துக் கொண்டிருந்த போதிலும் அவருக்குத் தாம் வழக்கமாக எழுதும் கதைக்கு வேண்டிய உணர்ச்சி வரவில்லை. அப்படி அவர் மனதைக் குழப்பிக் கொண்டிருந்த போது, தம் அறையின் வாயிற்படியில் யாரோ நிற்பது போன்ற பிரமை ஏற்படவே, திடீரென்று திரும்பிப் பார்த்தார். என்னே சோகம்! ஒரு பெண் அவிழ்ந்த கூந்தலுடனும் கலங்கிய கண்களுடனும் நின்று கொண்டிருந்தாள். அந்தப் பெண் நிற்கும் நிலையைக் கண்டதும் சகதேவருக்கு பீதி உண்டாகிவிட்டது. ஒருவேளை நல்லதங்காளுக்குத்தான் உயிர் வந்துவிட்டதோ என்று நிமிர்ந்து படத்தைப் பார்த்தார். ஆனால் அந்தப் படத்தில் நல்லதங்காள் இன்னும் ஏழாவது குழந்தையைத் தள்ளாமலேயே நின்று கொண்டிருந்தாள்.

அப்போது அந்தப் பெண்மணி, "நீங்கள்தானே சகதேவர்? நல்ல வேளையாக நான் வரும்போது நீங்கள் வெளியே எங்கும் போய்விடாமல் இருக்கிறீர்களே!" என்று கூறிக்கொண்டே சகதேவரின் எதிரில் இருக்கும் நாற்காலியில் வந்து உட்கார்ந்தாள்.

சகதேவர் சற்று சமாளித்துக் கொண்டு, "நீங்கள் யார்? உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார்.

"நான்தான் மந்தரகிரி சுந்தர காமாக்ஷி. உங்களிடம் ஒரு உதவியை நாடி வந்தேன்" என்றாள் அந்தப் பெண்.

"நான் ஒரு ஏழை எழுத்தாளன் தானே? என்னால் உங்களுக்கு என்ன உதவி புரிய முடியும்?"

"உங்களிடம் இருக்கும் சக்தி உங்களுக்கே தெரியாது போலும்! உங்கள் மேஜைமேல் இருக்கும் இந்த ஆயுதத்தால் எத்தனை பேரைக் கொன்றிருக்கிறீர்கள்; எத்தனை பேரைக் கிணற்றில் தள்ளியிருக்கிறீர்கள்; எத்தனை பேரைத் தற்கொலை பண்ணிக் கொள்ளச் செய்திருக்கிறீர்கள்! கத்தியை விடப் பேனா வலிமை உள்ளது என்பதை நீங்கள் நன்கு நிரூபித்திருக்கிறீர்களே; இப்போதும் அந்த பேனாவினால் தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்!"

ஆச்சரியம் தோய்ந்த கண்களுடன் சகதேவர், "யாரிடமிருந்து உங்களைக் காப்பாற்ற வேண்டும்?" என்று கேட்டார்.

"அதுதான் சித்தமல்லிபுரம் சொத்த மல்லித் தேவனிடமிருந்து!"

"ஐயோ! பெயரைக் கேட்டாலே பயமாயிருக்கிறதே? பெரிய கொள்ளைக்காரன் போலிருக்கிறதே!"

"என்னைப் பொறுத்தவரையில் அவன் கொள்ளைக்காரன்தான். அவன் எங்கள் ஊர் மிராசுதார்."

"அவன் உன்னை என்ன செய்தான்?"

"என்னைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று தினம் ஒரு தடவை எங்கள் வீட்டிற்கு வந்துவிடு

பிடிக்கவில்லை. ஆயினும் அவன் என்ன செய்வான்? 'நான் தங்களுடன் வருவதற்கில்லை என்று பீஜருப்தனிடம் சொல்லி மறுத்துவிட்டால் என்ன?' என்று அவன் ஒரு கணம் யோசித்தான். ஆனால் அப்படி தைரியமாகத் தன் முடிவைச் சொல்ல அவனுக்குத் துணிவு உண்டாகவில்லை. 'வர முடியாது' என்று மறுத்துச் சொல்வது மிகவும் க்ஷுத்ரமான செய்கையாகும் என்பதை அவனுடைய உள்ளம் இடித்துக் காட்டியது. இரவு முழுவதும் தூங்காமல் புரண்டு புரண்டு படுத்து அதே சிந்தனையில் பொழுதைக் கழித்தான். மறுநாள் காலை பொழுது விடிந்ததும், நேரே பீஜருப்தனிடம் சென்று "ஸ்வாமி! மதிப்புக்குரிய மிருத்யுஞ்ஜயரைப் போய்ப் பார்த்து வர எனக்கு அநுமதி வேண்டும்" என்றான்.

காரணத்தை அறிந்திருந்தும் பீஜருப்தன் வேண்டுமென்றே அறியாதவன் போல, "மிருத்யுஞ்ஜயரை எதற்காகப் போய்ப் பார்த்து வரவேண்டும்?" என்று கேட்டான்.

"நாமோ வெளியூருக்குச் செல்கிறோம். திரும்பிவர அதிக நாட்கள் பிடித்தாலும் பிடிக்கலாம். ஆகவே அவரிடம் விஷயத்தைச் சொல்லி விடை பெற்றுக்கொண்டு வரலாம் என்று எண்ணுகிறேன்" என்று பதில் அளித்தான் கவேதாங்கன்.

"சரி, தாராளமாகப் போய்வா!" என்று சொல்லி விடையளித்தான் பீஜருப்தன். அந்த வார்த்தைகளைச் சொல்லும்பொழுது அவனுடைய முகத்திலே இலேசாக இளநகை தாண்டவமாடியது.

ஒருவனோ, 'என்டா அப்பா! இந்தக் காதல் வலையில் போய் மாட்டிக் கொண்டோம்!' என்று வருத்தப்பட்டுக் கொண்டிருந்தான். மற்றொருவனோ காதல் புரியும் உற்சாகத்தில் தலைகால் தெரியாமல் ஆடிக்கொண்டிருந்தான்! (தொடரும்)

---

# நிருத்ய கலா ரஞ்சனி

சில காலமாக நமது கலாசாலைகள் உண்மையான கலை வளர்க்கும் சாலைகள் ஆக முயன்று வருகின்றன. ஆங்காங்கு மாணாக்கர்கள் ஊக்க மெடுத்துக் கலாசாலைகளில் கலைக் கழகங்களை ஸ்தாபித்து வருகிறார்கள். இவ்விதம் தாம்பரம் கிறிஸ்தவக் கல்லூரியில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் கலைக் கழகத்துக்கு ஆசிரியர் தங்கராஜ் தலைவராகவும் ஸ்ரீ வி. என். சாமராவ், ஸ்ரீ பி. கே. பாலசுப்பிரமணியம் இவர்கள் காரியதரிசிகளாகவும் ஏற்பட்டுக் கழகத்தைத் திறமையாக நடத்தி வருகின்றனர்.



சென்ற ஜனவரி மீ 26உ குடியரசுத் திருவிழா நடைபெற்றதல்லவா? இந்த விழாவை முன்னிட்டு, முதல் நாள் 25உ மாலையில் கிறிஸ்தவக் கல்லூரிக் கலைக் கழகத்தின் கொண்டாட்டம் நடத்தினார்கள். அச்சமயம், "வாழ்க்கை"ப் படம் மூலம் தமிழ்நாட்டின் பாராட்டுதலைக் கவர்ந்துள்ள குமாரி வைஜயந்தி மாலாவின் கதம்ப நடனக் கச்சேரி நடைபெற்றது. கல்லூரிப் பிரசங்க மண்டபத்தில் ஆயிரம் மாணவர்களுக்கு மேல் கூடியிருந்தனர். குமாரி வைஜயந்தியின் பரத நாட்டிய அபிநயங்களும், குஜராத்தி நடனம், பாம்பாட்டி நடனம் முதலியவையும் மாணவர்களுக்கு அபரிமிதமான உற்சாகத்தை அளித்தன. புத்த பகவானுடைய புனித வாழ்க்கையிலிருந்து எடுத்த சில நாட்டிய—நாடகக் காட்சிகள் மிக நன்றாயிருந்தன. குமாரி வைஜயந்தியின் கலைத் தொண்டைப் பாராட்டிக் கல்லூரிக் கலைக் கழகத்தார் "நிருத்யகலா ரஞ்சனி" என்னும் பட்டத்தை அளித்தனர். இந்த நடனக் கச்சேரிக்குச் சபைத் தலைமை வகித்த "கல்கி" ஆசிரியர் கலைக் கழகத்தின் சார்பாகக் குமாரி வைஜயந்திக்கு மேற்படி பட்டத்தை அளித்து, "பட்டத்திற்குச் சிறப்பு உண்டாகும்படியாகக் குமாரி வைஜயந்தியின் கலைத் திறமை மேன்மையுற வேண்டும்" என்று ஆசி கூறினார்.

சந்நியாச வாழ்க்கையை மேற்கொண்டு விட்டான் என்ற விஷயம் மற்ற சிற்றரசர்களுக்குத் தெரிந்து விட்டால் அவன் வெளியே தலை காட்ட முடியுமா? அது அவனுக்கு மிக மிக அவமானத்தை அல்லவா அளிக்கும்!



மூன்றாவதாக இன்னொரு விஷயம். அதற்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுக்க வேண்டியதில்லை என்றாலும் அவன் உள்ளத்திலே அது இலேசாக ஊசலாடிக் கொண்டிருந்தது. யசோதராவினால் அவனுடைய காதல் உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பி அவனைக் கவர்ந்து ஆட்கொண்டு விட முடியுமா? அவனுக்கு அந்த விஷயத்தில் சிறிது சந்தேகமாகத் தானிருந்தது.

பீஜகுப்தன் பகல் முழுவதும் அந்தப் பிரச்னையைத் தீர்ப்பதிலேயே ஈடுபட்டிருந்தான். அவன் அந்தப் பிரச்னையைத் தீர்க்க முயல முயல அது இன்னும் விடுவிக்க முடியாத சிக்கலான பிரசினையாகவே உருக்கொண்டு விட்டது. அதை இலேசில் தீர்க்க முடியாது என்ற நிலைமை ஏற்பட்டு விடவே, அவன் ஆய்ந்து ஓய்ந்து அலுத்துச் சலித்துப் போனான். அந்த விஷயத்தைப் பற்றிச் சிந்திக்கச் சிந்திக்க அவனுடைய உள்ளத்திலே சொல்ல முடியாத, சகிக்க முடியாத ஒரு வேதனை ஏற்பட்டு விட்டது. அந்தச் சிந்தனையிலிருந்து எப்படியாவது தன்னை விடுவித்துக் கொண்டு விட்டால் போதும் என்று கூட அவனுக்குத் தோன்றி விட்டது.

மாலை நேரத்தில் மஞ்சள் வெய்யில் இருக்கும் பொழுது அவன் சுவேதாங்கனைக் கூப்பிட்டனுப்பினான். சுவேதாங்கன் வந்ததும் அவனைப் பார்த்து, "சுவேதாங்கா! எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது!" என்று ஆரம்பித்தான்.

"என்ன யோசனை, ஸ்வாமி?" என்று பவ்யமாகக் கேட்டான் சுவேதாங்கன்.

"கொஞ்ச நாட்கள் எங்கேயாவது தேச யாத்திரைக்குப் போய் வரலாம் என்று எண்ணுகிறேன். நாம் காசிக்குப் போய்வருவோமா?" என்று கேட்டான் பீஜகுப்தன்.

"அதற்கென்ன? போய் வந்தால் போயிற்று" என்றான் சுவேதாங்கன்.

"நாளை மறு தினமே நாம் புறப்பட்டு விடலாம். என்ன புரிகிறதா?"

"என்ன? இவ்வளவு சீக்கிரமேயா புறப்பட வேண்டும்?" என்று வியப்புடன் கேட்டான் சுவேதாங்கன். யசோதராவுடன் தான் கொண்டுள்ள காதலை வளர்த்து அதை இன்னும் புஷ்டியுள்ளதாக ஆக்க வேண்டும் என்பது அவனுடைய அந்தரங்க ஆசை. ஆகவே தன் காதலை வளர்க்கும் பொருட்டு பாடலிபுத்திர நகரத்திலேயே கொஞ்ச நாட்கள் இருக்க வேண்டியது அவசியம் என்று எண்ணினான் அவன். ஆகவே, "இன்னும் பத்துப் பன்னிரண்டு நாட்களில் புறப்பட்டால் போதாதா? பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வதற்குச் சில நாட்களாவது வேண்டாமா?" என்று கேட்டான்.

பீஜகுப்தன் வறட்சி ததும்பிய குரலில், "இல்லை, இல்லை. நாளை மறு தினமே நாம் கட்டாயம் புறப்பட்டு விட வேண்டும். ஏற்பாட்டுக்கு என்ன? கண் மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள் ஆகி விடுகிறது. நீயும் நானும் தானே போகப் போகிறோம்! நம் இருவருக்கும் பிரயாணத்துக்கான ஏற்பாடுகள் செய்ய எத்தனை நாட்கள் பிடிக்கப் போகிறது?" என்று கேட்டான்.

பீஜகுப்தனுடைய பேச்சில் கடுமை தொனிப்பதைக் கண்ட சுவேதாங்கன், "எஜமானர் உத்தரவுப்படி செய்யச் சித்தமாயிருக்கிறேன்" என்று மிகவும் விநயமாகப் பதில் அளித்தான்.

அன்று இரவு முழுவதும் சுவேதாங்கன் கண் கொட்டவில்லை. அன்றைய நிகழ்ச்சியின் நினைவிலேயே அவன் இராப் பொழுதைக் கழித்து விட்டான். பீஜகுப்தனுடைய முடிவு அவனுக்குச் சிறிதும்

சித்திரலேகாவைப் புரிந்து கொள்ள குமாரகிரி எவ்வளவோ முயன்றான். ஆனால் அவன் முயற்சி செய்யச் செய்ய சித்திரலேகா புரியாத புதிராக, விடுவிக்க முடியாத விடுகதையாகத்தான் ஆனாள். 'சித்திரலேகாவுக்குத் தீக்ஷை அளிக்க முடியாது என்று சொல்லி மறுத்து விட்டால் என்ன?' என்ற எண்ணம் மறுபடியும் ஒரு முறை குமாரகிரியின் உள்ளத்திலே எழுந்தது. ஆகவே அவன் சித்திரலேகாவைப் பார்த்து, "சித்திரலேகா! என்னால் உன்னைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை. நீ என்னைக் காட்டிலும் எந்த விதத்திலும் தாழ்ந்தவள் அல்ல. உனக்குத் தீக்ஷை அளிக்க நான் முன் வருவது எவ்வளவு தூரம் உசிதமாகும் என்பதை நான் தீர ஆலோசித்துப் பார்த்தாக வேண்டும். நான் தீர ஆலோசித்து ஒரு முடிவுக்கு வராதவரையில்......" என்று சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே விசாலதேவன் குடிசைக்குள் நுழைந்தான். விசாலதேவனைப் பார்த்ததும் குமாரகிரி அப்படியே அரை குறையாக வாக்கியத்தை நிறுத்திவிட்டான். விசாலதேவன் குமாரகிரியின் காலடிகளைத் தொட்டு வணங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டான். பிறகு சித்திரலேகாவுக்குத் தன் வணக்கத்தைத் தெரிவித்தான். அப்புறம் அவன் அங்கிருந்து வெளியே சென்று விட்டான்.

விசாலதேவன் வெளியே சென்றதும் குமாரகிரி 'கலகல' வென்று நகைத்தான். பிறகு, "உனக்கு நான் தீக்ஷை அளித்துத்தான் ஆகவேண்டும். உன்னை நான் என்னுடன் கூடவே வைத்துக் கொண்டு என்னையே பரீக்ஷித்துக் கொள்ளவேண்டும் என்பதுதான் தெய்வ சங்கற்பம் போலும்! ஆகவே, நடன ராணி! நான் இப்பொழுது சொன்னவற்றையெல்லாம் ஒரு பொருட்டாக எண்ணாதே! மறந்துவிடு" என்று சொல்லி ஸ்நானம் செய்வதற்கு எழுந்தான்.

## இருபத்தோராம் அத்தியாயம்

# புரியாத பிரச்னை

பகலுக்குப் பின் இரவு; இரவுக்குப் பின் பகல்.

இன்பத்துக்குப் பின் துன்பம்; துன்பத்துக்குப் பின் இன்பம்.

இரவு இன்றிப் பகலுக்குப் பெருமை கிடையாது. பகல் இன்றி இரவுக்குப் பெருமை கிடையாது. துன்பம் இன்றி இன்பத்துக்கு ஒரு மதிப்பு இல்லை; இன்பம் இன்றித் துன்பத்துக்கும் ஒரு மதிப்பில்லை.

இதுதான் மாறும் தன்மையின் நியதி. உலகம் மாறும் தன்மை வாய்ந்தது. மனிதன் அதே உலகத்தின் ஒரு அம்சம். உலகத்தின் இயற்கையான மாறும்தன்மை மனிதனிடமும் குடிகொண்டிருந்தால், அதில் ஆச்சரியப்படுவதற்கு இடம் ஏது? பீஜகுப்தனும் உலகத்தின் அம்சமான ஒரு மனிதன்தானே! அவன் இன்பத்தை நுகர்ந்திருந்தான். துன்பத்தை அறிந்து கொள்ள வேண்டியதும் அவசியம்தானே? ஆகவே துன்பம் அவனைச் சூழ்ந்தது. ஆனால் பீஜகுப்தன் துன்பத்தின் சுமையைக் கண்ட மாத்திரத்திலேயே கதி கலங்கி விட்டான். அவன் கனவிலேகூடக் கற்பனை செய்தறிந்திராத காரியம் நிகழ்ந்து விட்டது. 'நாம் இன்னும் எப்படி உயிருடன் வாழ்ந்திருக்கிறோம்?' என்பதை நினைக்கும் பொழுது அவனுக்கு ஒரே வியப்பாகப் போய் விட்டது. பீஜகுப்தனுக்குத் தன் வாழ்க்கை சுமக்க முடியாத மாபெரும் சுமையாகத் தோன்றியது.

ஆயினும் மனிதன் இன்பத்தையும் துன்பத்தையும் அநுபவிப்பதற்காகத்தானே ஆக்கப்பட்டிருக்கிறான்! ஒன்றைக் கண்டு இன்புறுவது; மற்றொன்றைக் கண்டு அஞ்சிச் சாவது என்றால் அது சுத்தப் பேடித்தனம் அல்லவா? பீஜகுப்தனுக்கு அது தெரியாத விஷயம் அல்ல. ஆகவே அவன் எப்படியும் சித்திரலேகாவின் பிரிவுத் துயரைத் தைரியமாகப் பொறுத்துக் கொள்ளுவது என்று முடிவு செய்தான்.

ஆனால் அதற்கு ஒரே ஒரு இடைஞ்சல் இருந்தது. பாடலிபுத்திரத்திலேயே அவன் தங்கியிருந்தால் சித்திரலேகாவைச் சந்திக்கும்படியான சந்தர்ப்பம் வாய்க்கக்கூடும். அப்படி அவளைப் பார்க்கும்படியான சந்தர்ப்பம் வாய்த்து விட்டால் அப்புறம் பிரிவுத் தவம் புரிந்துதான் என்ன பிரயோஜனம்? பிரிவின் மதிப்பைத்தான் அவன் எப்படி சரியாக உணர்ந்து கொள்ள முடியும்?

இரண்டாவதாக அதைவிடப் பெரியதான இன்னொரு விஷயமும் அவனுடைய தவத்துக்குக் குறுக்கே நின்றது. பீஜகுப்தனை விட்டொழித்து விட்டுச் சித்திரலேகா



கலாம் என்று சொல்லும்பொழுது பெண்கள் மட்டும் ஏன் அவ்வாறு செய்யக் கூடாது? பிள்ளையிடம் அன்பு காட்டுவது போலவே பெண்ணால் தன் கணவனிடமும் அன்பு காட்ட முடியும். எத்தனை குழந்தைகள் பிறந்தாலும் எல்லாவற்றையும் சமமாகப் பாவித்து ஏற்றத் தாழ்வின்றி அன்பு காட்டும் இயல்பு பெண்களுக்கு உண்டு என்பது உலக மறிந்த விஷயம். அப்படியிருக்கும் பொழுது ஒருவர் ஏக காலத்தில் எத்தனை பேருடன் வேண்டுமானாலும் ஆத்மிகத் தொடர்பு வைத்துக் கொள்ளுவது சாத்தியமான காரியம் என்றே எனக்குத் தோன்றுகிறது" என்று சித்திரலேகா சொன்னாள்.

"சித்திரலேகா! நீ என்னை ஏமாற்ற விரும்புகிறாயா? பீஜகுப்தனை ஏமாற்ற விரும்புகிறாயா? அல்லது தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ள விரும்புகிறாயா? நீ சொல்லுவதிலிருந்து ஒன்றுமே விளங்கவில்லையே!" என்றான் குமாரகிரி.

"குருதேவா! நான் தங்களை ஏமாற்றவில்லை. என் சொல்லைத் தாங்கள் பரிபூரணமாக நம்பலாம். நான் பீஜகுப்தனைத்தான் ஏமாற்றுகிறேனோ, அல்லது என்னையே தான் ஏமாற்றிக் கொள்ளுகிறேனோ, சொல்வதற்கில்லை. ஆனால் தங்களை ஏமாற்றவில்லை என்பது மட்டும் சர்வ நிச்சயம்" என்று சொன்னாள் சித்திரலேகா.

"இல்லை, சித்திரலேகா! இன்னுமொரு தடவை நீ மறுபடியும் நன்றாக யோசித்துப் பார். ஒரு விஷயத்தை நீ நன்றாக நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். என்னுடன் இருந்து கொண்டு நீ பீஜகுப்தனைக் காதலிக்க முடியாது. என்னுடன் இருந்தால் உலகத்தின் கண்ணே நீ உயர்ந்தவளாக ஆக வேண்டும். இந்த உலகத்தாரைக் காட்டிலும் ஒரு படி உயர்ந்தவளாக ஆக வேண்டும். நான் போகும் பாதையோ தவமும் சாதனையும் கலந்த வறட்டுப்பாதை. மனோ பலவீனத்துக்கு அங்கே சிறிதும் இடம் கிடையாது. இன்னுமொரு முறை நீர ஆலோசித்துப் பார்த்து முடிவு செய்வதற்கு நான் உனக்கு வேண்டிய அவகாசம் தருகிறேன்" என்றான் குமாரகிரி.

"குருதேவா! நான் நீர ஆலோசித்துப் பார்த்த பின்னரேதான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன். இன்னுமொரு தடவை யோசிக்க வேண்டிய அவசியமே இல்லை. தாங்கள் சொல்லும் பிரகாரம் நான் நடக்கச் சித்தமாயிருக்கிறேன். தாங்கள் சொல்லும் பாதையில் சென்று நான் மமத்துவத்தையே விட்டு ஒழிக்கத் தயாரா யிருக்கிறேன். அப்படியிருக்கும்பொழுது இந்த உலகம் எந்த மூலைக்கு? இதை விட்டொழிப்பது மிக மிக எளிய காரியந்தானே?" என்றாள்.

குமாரகிரியினால் சித்திரலேகாவைப் புரிந்து கொள்ள முடியவில்லை. சித்திரலேகாவின் தோற்றத்திலே அலாதியானதொரு கவர்ச்சி இருந்தது. அந்தக் கவர்ச்சியின் மகிமையை என்னவென்று சொல்லுவது?

பந்தமான தொடர்பு அற்றுப் போனால் என்ன? நம்முடைய ஆத்மாவின் தொடர்பு அதைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமான பலம் பெறும்; வளமும் பெறும்" என்றான்.

"சித்திரலேகா! மறுபடியும் யோசித்துச் சொல்லு. நீ சொல்லும் காரியத்தைச் செய்ய என்னால் இயலாது. நான் இதைத் தவிர உனக்கு வேறு என்ன சொல்ல முடியும்?" என்றான் பீஜகுப்தன்.

பீஜகுப்தனின் தோள்மீது சித்திரலேகா தன் கைகளைப் போட்டவாறு, "ஸ்வாமி! கொஞ்சகாலம் நாம் பிரிந்து தனித்திருந்து தான் பார்ப்போமே! கொஞ்ச நாட்கள் போனால் ஒருவேளை மனம் மாறித் தாங்கள் திருமணம் செய்து கொள்ள இசைந்தாலும் இசையலாம் அல்லவா? காதலில் பிரிவு ஏற்படுவது இயல்பே. நம்முடைய காதல் வாழ்க்கையிலும் அம்மாதிரியான பிரிவு ஏற்பட்டிருப்பதாக எண்ணி நாம் பிரிவுத் துயரைக் கொஞ்ச காலம் அநுபவித்துத்தான் பார்ப்போமே!" என்றாள்.

பீஜகுப்தன் எழுந்து நின்றான். "நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். கேட்பதோ கேட்காமல் இருப்பதோ உன் கையில் இருக்கிறது. உன் இஷ்டப்படியே செய்வோம். ஆனால் கொஞ்ச நாட்களுக்குப் பிறகு தவறு என்னுடையது அல்ல; உன்னுடையதுதான் என்பதைத் தானாகவே உணர்வாய்!" என்றான். அதைச் சொல்லி முடித்ததும் அவன் அங்கிருந்து வெளியேறினான். சித்திரலேகா அவனை வழி அனுப்புவதற்காக ராஜவீதி வரை சென்றாள். ராஜவீதியை அடைந்ததும் அவன் நின்றான். விடை பெற்றுக் கொள்ளும்பொழுது இருவரும் ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்து முத்தமிட்டுக் கொண்டனர். ஆகா! அந்த அரவணைப்பிலே தான் என்ன இன்பம்! என்ன சுகம்! என்ன புல்லரிப்பு! பீஜகுப்தன் அம்மாதிரி ஆழ்ந்த அன்பை அதுவரை கண்டதேயில்லை.



விடை கொடுக்கும்பொழுது பீஜகுப்தனின் பாதங்களை சித்திரலேகா பிடித்துக்கொண்டு, 'ஸ்வாமி! ஒருவேளை நான் செய்யும் இந்தக் காரியம் அநுசிதமானதோ, என்னவோ! எப்படியிருந்தாலும் தாங்கள் என்னை மன்னித்தருள வேண்டும்" என்று மிகவும் பணிவாக வேண்டிக் கொண்டாள்.

பீஜகுப்தன் விடைபெற்றுச் சென்றதும் சித்திரலேகா குடிசைக்குத் திரும்பிவந்தாள். அப்பொழுது குமாரகிரி ஏதோ தீவிரமான சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். சித்திரலேகாவைப் பார்த்ததும் அவன் ஆசனத்தில் அமருமாறு அவளுக்கு உத்தரவிட்டான். பிறகு, "சித்திரலேகா! நீ என்னைக் காதலிப்பதாகச் சொன்னாயே! அது என்ன, உண்மைதானா?" என்று கேட்டான்.

சித்திரலேகா வியப்புற்று, "ஆமாம், உண்மைதான்; உங்களுக்குச் சந்தேகம் எழக் காரணம் என்ன?" என்று கேட்டாள்.

"'நான் உங்களைக் காதலிக்கிறேன். ஆயுள் உள்ளவரை காதலிப்பேன்' என்று சற்றுமுன்பு நீ பீஜகுப்தனிடம் சொன்னாயே, அதனால்தான் கேட்டேன்!"

"ஆமாம்! நான் சொன்னதில் என்ன தவறு? நான் நியாயத்தைத்தானே சொன்னேன்!"

"நான் சொல்வது உனக்குப் புரியவில்லை என்று தோன்றுகிறது. ஏக காலத்தில் நீ இரண்டு பேரை எப்படிக் காதலிக்க முடியும்? ஏககாலத்தில் இரண்டு பேரைக் காதலிப்பது நடக்கக்கூடிய காரியம் தானா?" என்று கேட்டான் குமாரகிரி. அவனுடைய அமைதியே உருவெடுத்த முகத்தில் இலேசாக அவநம்பிக்கையின் சாயை படர்ந்தது.

"ஏன்? இது நடக்கக் கூடாத காரியம் என்று தங்களுக்குத் தோன்றுகிறதோ? குருதேவா! ஆண்கள் இரண்டு விவாகங்கள் செய்து கொள்ளலாம். அவர்கள் இரு மனைவிகளை ஏக காலத்தில் காதலிக்



# சித்திரலேகா

ஸ்ரீ பகவதி சரண் வர்மா

மொழிபெயர்ப்பு. ரா. வீ.

இருபதாம் அத்தியாயம்

## தெய்வ சங்கற்பம்

சித்திரலேகாவின் மனம் பேதலித்தது. ‘குமாரகிரியின் குடிசையிலே தவ வாழ்க்கை வாழ்வதைக் காட்டிலும் பீஜகுப்தனுடன் புறப்பட்டுச் சென்று விட்டால் என்ன?’ என்ற எண்ணம் அவளுடைய உள்ளத்திலே எழுந்தது. அடுத்த கணம் அவள் பீஜகுப்தனுடன் புறப்பட்டு விடுவதற்குத் தன்னைத் தயார்கூடச் செய்துகொண்டு விட்டாள். ‘சித்திரலேகா! நீ வாழ்க்கையில் வெகு தூரம் முன்னேறி வந்துவிட்டாய். இனி பின் திரும்புவது என்றால் அது உனக்கு அழகில்லை. இவ்வளவு தூரம் முன்னேறிய நீ மனம் மாறிப் பின் திரும்பினால் நாலு பேர் ஏசமாட்டார்களா? முன் வைத்த காலைப் பின் வைக்காதே!’ என்று எச்சரித்தது அவளுடைய அந்தராத்மா. அவளுடைய உள்ளத்திலே போர் மூண்டது. கடைசியில் அவள் பீஜகுப்தனின் பாதங்களில் விழுந்தபடி விசித்து விசித்து அழலானாள். பீஜகுப்தன் அவளைக் கைகொடுத்துத் தூக்கி நிறுத்தினான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் சித்திரலேகா சாந்தமடைந்து, “ஸ்வாமி! தாங்கள்தான் நான் வழிபடும் தெய்வம். தாங்கள் சாதாரண மனிதர் அல்ல; தெய்வாம்சம் பொருந்தியவர். நான் தங்களை நன்கு அறிவேன். நான் தங்களைக் காதலித்துத் தங்களுடைய வாழ்க்கையைக் கெடுத்து விட்டேன் என்பதையும் நன்கு அறிவேன். ஸ்வாமி! தாங்கள் அவசியம் விவாகம் செய்து கொண்டுதான் ஆகவேண்டும். தாங்கள் என்னைக் காதலிப்பது உண்மைதானா? உண்மையானால் என்னை இன்புறச் செய்யவேண்டியது தங்களுடைய கடமை. தாங்கள் விவாகம் செய்து கொள்ளாதவரையில்—தங்களுக்குப் பிறக்கும் குழந்தை என்னை ‘அம்மா!’ என்று சொல்லி அழைக்காதவரையில் எனக்கு இன்பம் ஏற்படவே முடியாது. என் மனம் குளிரவேண்டும் என்று தாங்கள் நினைத்தால் அவசியம் தாங்கள் கல்யாணம் செய்து கொண்டுதான் ஆகவேண்டும். ஸ்வாமி! நான் தங்களைக் காதலித்தேன்; காதலிக்கிறேன்; என் ஆயுள் உள்ளவரை காதலிப்பேன். இது சத்தியம். சுகபோகத்தில் திளைத்திருப்பதுதானா காதலின் பிரதானமான அங்கம்? சுகபோகங்களைத் தவிர்த்துக் காதல் புரிவது கஷ்டமான காரியமா? நான் தற்சமயம் தங்களுடன் சரீர சம்பந்தமான தொடர்பைத்தான் உதறித் தள்ளுகிறேனே யொழிய வேறொன்றும் இல்லை. நம்முடைய சரீர சம்



'ஆகட்டும்' என்று சொல்லிவிட்டு பாபு வண்டியில் ஏறி உட்கார்ந்தான்.

ஜட்கா புறப்பட்டது. பாபு தலையை வெளியே நீட்டி மணி எத்தனை ஆகிறது என்று மணிக்கூண்டைப் பார்த்தான். ஏழு மணிக்கு இன்னும் சரியாகப் பத்து நிமிஷமே பாக்கி இருந்தது. அதற்குள் ஸ்டேஷனுக்குப் போயாக வேண்டும். கூட்டத்தில் முண்டி அடித்துக் கொண்டு டிக்கட்டும் வாங்கியாக வேண்டும். முடியுமா?

"சீக்கிரமாக ஓட்டு, அப்பா!" என்றான் பாபு ஜட்கா வண்டிக்காரனைப் பார்த்து.

வண்டி வேகமாகத்தான் பறந்தது. ஆனால் பாபுவுக்கு அது சுலபமாகப் போவது போலத் தோன்றியது. பரபரப்பின் மிகுதியால் சும்மா உட்கார்ந்திருக்க அவனால் முடியவில்லை. கையையும் காலையும் ஆட்டினான். முகத்தைச் சுளித்தான். பற்களைக் கடித்துக் கொண்டான். "ஜல்தி," "ஜல்தி" என்று வண்டிக்காரனை அவசரப்படுத்தினான்.

ஆச்சு; பாதி தூரம் வந்தாகிவிட்டது. இன்னும் ஒரு ஐந்து நிமிஷத்திற்குள் ஸ்டேஷனை அடைந்து விடலாம். ஸ்டேஷனில் அவனுடைய நண்பன் கிச்சுவின் அண்ணன் தானே புக்கிங் கிளார்க்? — இப்போதுதான் அவனுக்கு ஞாபகம் வந்தது! அவரிடம் சொல்லி எப்படியாவது ஒரு டிக்கட் வாங்கி விடலாம். ஆனால் இது என்ன சத்தம்? 'கிஜு, கிஜு' வென்று ரயில் பின்னால் வந்து கொண்டிருந்தது. அடாடா! ரயில் வந்துவிட்டதா? இனி அதைப் பிடிக்க முடியாதோ? (தொடரும்)

# விஞ்ஞானியின் தியாகம்

தென்னிந்தியாவில் ஒரு சிறு கிராமத்தில் இரு சகோதரர்கள் இருந்தார்கள். மூத்த சகோதரர் ரொம்பப் படித்தவர். அவர் வெளியூரில் உத்தியோகம் பார்த்து வந்தார். இளையவர் சொந்த கிராமத்திலேயே இருந்து கொண்டு பூர்வீகச் சொத்தாகிய நிலபுலங்களைக் கவனித்து வந்தார். அது பெரிய பணக்காரக் குடும்பம்.

மூத்தவர் அடக்கமும், அன்பும் மிக்கவர்; இளையவர் ஊக்கமும் உற்சாகமும் மிக்கவர். வருஷங்கள் பல கழிந்தன. இளையவருக்கு தம் பங்கைப் பிரித்துக் கொண்டு தனியாகப் போய்விட வேண்டும் என்று ஆசை உண்டாயிற்று. இதைத் தம் தமையனிடம் தெரிவித்தார். அவரும் அதற்கு ஆட்சேபம் எதுவும் சொல்லாமல் உடனே ஒப்புக் கொண்டார்.

பிரிவினைக்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் நடந்தன. நன்செய், புன்செய்களில் சரிபாதியாகப் பங்கிட்டுக் கொள்வது என்று முடிவாயிற்று. ஆனால் ரொக்கமாயுள்ள ரூபாயையும் நகைகளையும் தாம் எடுத்துக் கொள்ள விரும்பினார் இளையவர். மூத்தவருக்குத் தம் சகோதரரின் ஆசை தெரிந்தது. உடனே தமக்குச் சொத்தில் பாகமே வேண்டாம் என்றார், எல்லாவற்றையும் தம் தம்பியே அனுபவித்துக் கொள்ளலாம் என்றார் சொல்லிவிட்டுப் போய்விட்டார். ஊர் முழுவதும் வியந்தது அவரது தியாகத்தை. அவர் யார் தெரியுமா?

சில தினங்களுக்குமுன் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு அவர்கள் புதுடில்லியில் உள்ள தேசிய பௌதிக ஆராய்ச்சி ஸ்தாபனத்தைத் திறந்து வைத்துப் பேசும்போது, "இந்தியாவின் பிரதம மந்திரியாக இருப்பதைவிட, தக்க யோக்யதாம்சம் மட்டும் எனக்கு இருக்குமாகில், நான் இந்த ஸ்தாபனத்தின் டைரக்டராக இருப்பதைத்தான் பெரிதும் விரும்புவேன்!" என்று கூறினார் அல்லவா? அந்த ஸ்தாபனத்தின் டைரக்டராகத் தற்போது இருந்து வரும் ஸ்ரீ கே. எஸ். கிருஷ்ணன் என்ற புகழ் பெற்ற விஞ்ஞானிதான் மேலே குறிப்பிடப்பட்ட தியாகத்தைச் செய்தவர்.



—சீனி



கூடம் திறக்கிறார்கள்" என்று ஒரு நண்பன் பாபுவுக்கு நினைவூட்டினான். "பட்டணத்திலிருந்து மறக்காமல் நமது கிளப்பிற்கு ஒரு ஊதல் வாங்கிக் கொண்டு வா. உதட்டைக் குவித்து ஊதுவது சிரமமாக இருக்கிறது" என்று மற்றொருவன் ஞாபகப் படுத்தினான். எல்லாவற்றிற்கும் தலையாட்டினான் பாபு.

இத்தனை சிநேகிதர்களையும் காவிரிப் பாலத்தையும் உப்பு மண்ணையும் சில தினங்களுக்கு விட்டுப் பட்டணத்துக்குப் போக வேண்டியதாக இருக்கிறதே என்று பாபுவுக்குக் கொஞ்சம் வருத்தமாகத்தான் இருந்தது.

கடியாரம் மணி ஆறு அடித்தது. பாபு புறப்படுவதற்குத் தயாரானான். ஸ்டேஷனுக்கும் அவன் வீட்டுக்கும் ஏறக்குறைய முக்கால் மைல் தூரம் இருக்கும். சாமான்களைத் தூக்கிக் கொண்டு அவ்வளவு தூரமும் நடக்க அவனால் முடியாது. ஒரு ஜட்கா வைத்துக் கொண்டுதான் போகவேண்டும். ஒரு ஜட்காவை அழைத்துக் கொண்டு வரலாம் என்று அவன் வெளியே போனான். நாற்புறமும் பார்த்தான். கொஞ்ச தூரம் வரை நடந்துபோய்க் கூடப் பார்த்தான். ஒரு ஜட்காவைக் கூடக் காணோம். "எங்கே போய்த் தொலைந்தது?" என்று பாபு முகத்தைச் சுளித்தான். எங்கிருந்தாவது ஒரு ஜட்கா வராதா என்று தெருக் கோடியையே அவன் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்குப் பரபரப்பு அதிகமாயிற்று.

மணி ஆறரை ஆகிவிட்டது. பாபு துடியாய்த் துடித்தான். பொறுமை இழந்து அவன் வீட்டுக்குப் போனான். அப்போது வாசலில் ஒரு ஜட்கா நின்று கொண்டிருந்தது.

"என்னடா பாபு, நீ எங்கே போய் விட்டாய்? உனக்காக நான் ஜட்காவை அழைத்துக் கொண்டு வந்து எவ்வளவு நேரம் ஆகிறது?" என்றாள் அவன் தாயார்.

பாபு அவசர அவசரமாகச் சாமான்களை எடுத்து ஜட்காவில் வைத்துக்கொண்டு ஸ்டேஷனுக்குப் புறப்பட்டான்.

"சமத்தாகப் போய் விட்டு வா. ஜன்னலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து எட்டிப் பார்க்காதே. அம்மாமி சற்று 'கடுமுடு' என்று இருப்பாள். குழந்தை, குட்டி இல்லாதவள். அவளுக்கு உன்னைப் போன்றவர்கள் உள்ளம் புரியாது. அவளிடம் அடக்க ஒடுக்கமாக நடந்து கொள்" என்று பாபுவுக்குப் புத்திமதி சொல்லி அனுப்பினாள் அவனுடைய தாயார்.



கமலாவுக்குக் கணக்கு என்றாலே ரொம்பப் பயம். ஒருநாள் அவளுடைய ஆசிரியர், வழக்கமாகப் போடும் கணக்குகளை அவளுக்குப் போடாமல், மேலே கண்ட விதமாக எட்டு வட்டங்களைப் போட்டு, அவற்றில் 2, 4, 6, 8, 10, 12, 14, 16—ஆகிய இந்த எட்டு எண்களையும் அடைக்க வேண்டுமென்றும், எந்தப் பக்கத்திலுள்ள மூன்று எண்களைக் கூட்டினாலும் மொத்தம் 28 வர வேண்டுமென்றும் கூறினார். அவள் விரைவில் செய்து முடித்துவிட்டாள். உங்களால் முடிகிறதா, பாருங்கள்!

5-2-50 இதழில் வெளியான புதிருக்கு விடை:
முதலில் இருந்த எலிகள் 41.
பூனை முதலில் சாப்பிட்ட எலிகள் 24.

வில் அவனுடைய கோஷ்டி ஒன்று கிரிக்கெட் ஆடிக் கொண்டே "டேய், பாபு!" என்று இடை மறித்தது. அவனுக்கு எதுவுமே காதில் விழவில்லை. ஒரே ஓட்டமாக ஓடினான்.

* * *

இரு தினங்களுக்குப் பிறகு பாபுவின் மாமா பட்டணத்திலிருந்து கடிதம் போட்டிருந்தார். பத்து ரூபாய் பணமும் அனுப்பி, "புறப்பட்டுவாடா போக்கிரிப் பயலே! இங்கே 'எக்ஸிபிஷன்' 'பார்க்பேர்' எல்லாம் வீணுகப் போகிறது!" என்று குறிப்பிட்டிருந்தார்.

பாபுவுக்கு நிலை கொள்ளவில்லை. அன்றைக்கே சென்னைக்குப் புறப்படுவது என்று முடிவு செய்தான். மாமாவின் கடிதத்தைப் பையில் போட்டுக் கொண்டு உற்சாகமாக அங்கு மிங்கும் நடந்தான். அவனுக்கு ஒரு நிமிஷம் கழிவது ஒரு யுகம்போல இருந்தது. கடவுள் தனக்கு மட்டும் இரண்டு இறக்கைகளைக் கொடுத்திருந்தால் உடனே பறந்து பட்டணம் போய் விடலாமே என்று நினைத்தான். இரவு ஏழு மணிக்குத்தான் வண்டி. அது வரை எப்படிப் பொழுதைப் போக்குவது என்று அவனுக்குத் தெரியவில்லை.

பிரயாணத்துக்கு வேண்டிய சாமான்களையும் பெட்டி படுக்கையையும் அவன் அப்போதே எடுத்து வைக்கத் தொடங்கினான்.

பாபுவின் அம்மாவுக்கு முதலில் சந்தோஷமாகத்தான் இருந்தது. பிறகு அவள் யோசித்தாள். "பாபு சின்னப் பையனுச்சே; பட்டணம் வெகு தூரத்துக்கு அப்பால் அல்லவா இருக்கிறது? அங்கே அவன் பத்திரமாகப் போய்ச் சேருவானா? முன்பின் தெரியாத ஊர் அல்லவா? அனுப்பலாமா, கூடாதா?" என்று யோசித்தாள். இதை அவள் பாபுவிடமும் கூறினாள்.

பாபு இதைக்கேட்டுச் சிரித்துவிட்டு, "மதராஸ் என்ன! பம்பாய்க்கும் கல்கத்தாவுக்கும் கூட நான் தனியாகப் போய் விட்டு வந்து விடுவேன். நீ கவலைப்படவே வேண்டாம்" என்றான்.

போக வேண்டாம் என்று தடுத்தாலும் அவன் கேட்கமாட்டான் போலத் தோன்றியது.

பாபுவின் சுபாவம் அவளுக்குத் தெரியும். பிடிவாதத்துடன் கூடப் பிறந்தவன். குழந்தையாக இருந்தபோது ஒரு மரக்குதிரைக்கு அவன் பிடித்த பிடிவாதம் அந்தத் தெருவையே கலங்க அடித்தது. அப்படிப்பட்ட பாபுவை எப்படித் தடுப்பது என்று அவன் அம்மாவுக்குப் புரியவில்லை. அவனுடைய மாமா, தான் எழும்பூர் ரயிலடிக்கு வந்து அவனை அழைத்துக் கொண்டு போவதாகக் கடிதம் எழுதியிருந்தது அவளுக்கு ஞாபகம் வந்தது. உடனே அவளுக்குச் சற்று நிம்மதி உண்டாயிற்று.

தெருப் பையன்கள் பாபுவுக்குப் பிரிவு உபசார விருந்து வைத்தார்கள். இலந்தைப் பழ விருந்துதான்! "ஜனவரி மாதம் மூன்றும் தேதி நினைவு இருக்கட்டும்; அன்று நமது பள்ளிக்



# பாபு எங்கே?

நவீனன்





## 1. 'பட்டணத்துக்கு வரட்டுமா?'

மாலை மணி நான்கு இருக்கும். பாபு எழுதிக் கொண்டிருந்தான். அவன் முழங்காலை மேஜையாக உபயோகித்தான். நாக்கு மைப்புட்டியாக மாறி அவசியமானபோது பென்னிலே நனைத்துக் கொடுத்தது.

அவனுடைய தாயார் அந்தப் பக்கம் வந்தாள். அவளுக்கு ஆச்சரியம் உண்டாகி விட்டது. பொதுவாக அந்த நேரத்தில் பாபுவை வீட்டில் பார்க்க முடியாது. அதுவும் விடுமுறை நாள் என்றால் பூதக் கண்ணாடி வைத்து அவன் இருக்கும் இடத்தைத் தேடினாலும் கண்டு பிடிக்க முடியாது. தப்பித் தவறிச் சில நிமிஷங்களுக்கு அவனுடைய தலை தெரிந்தாலும் தனியாகத் தெரியாது. பத்துத் தலைகளாகத் தெரியும்! அதாவது, பத்து நண்பர்கள் புடை சூழ திக்விஜயம் செய்து கொண்டிருப்பான்.

ஆனால் அன்று?

பாபு வீட்டில் இருந்தான். பரம சாதுவாக இருக்கும் இடம் தெரியாமல் இருந்தான். குனிந்த தலை நிமிராமல் எழுதிக் கொண்டிருந்தான். பாபுதானா அது என்று கூட அவன் அம்மாவுக்குச் சந்தேகம் வந்து விட்டது.



பாபுவுக்குப் பன்னிரண்டு வயது. எப்போதும் ட்ராயர், சட்டை போட்டுக்கொண்டு இருப்பான். துரு துரு வென்று இருப்பான். அவன் மூன்றாம் பாரம் வாசித்துக் கொண்டிருந்தான்.

அதற்கு முதல் நாள் தான் அரைப் பரீட்சை முடிந்து பள்ளிக்கூடம் சாத்தினார்கள். "விடுமுறை! விடுமுறை!" என்று உற்சாகமாகப் பாடிக்கொண்டு வீடு வந்து சேர்ந்தான் பாபு. மொத்தமாக இன்னும் பத்துப் பதினைந்து தினங்களுக்கு பேனா, எழுத்து, படிப்பு எதுவுமே நினைவிற்கு வரக்கூடாது! ஆனால் இது என்ன கூத்து? பிள்ளையாண்டான் விளையாட்டை மறந்து இப்படி விழுந்து விழுந்து என்னமோ எழுதிக் கொண்டிருக்கிறானே? - பாபுவின் தாயார் ஆச்சரியப் பட்டாள்.

"பாபு, என்னடா எழுதுகிறாய்?" என்று கேட்டுக் கொண்டே அவனுடைய அருகில் போனாள் அவள்.

பாபு திரும்பி அம்மாவைப் பார்த்தான். "அம்மா! லீவுக்குப் பட்டணம் போகப் போகிறேன். மாமாவுக்குக் கடிதம் எழுதுகிறேன். மாமாவின் விலாசம் என்ன?" என்று கேட்டான்.

தாயாருக்குப் பெருமை தாங்கவில்லை. தன் பிள்ளை விடுமுறை நாட்களில் வீட்டையும், ஆற்றங்கரையையும் சுற்றிக் கொண்டு அலையாமல் இந்த மட்டிலாவது சமர்த்தாகப் பட்டணம் போகிறேன் என்கிறானே என்று அவளுக்குச் சந்தோஷம் உண்டாயிற்று.

"போய்விட்டு வாடா, கண்ணே!" என்று சொல்லி அன்புடன் அவனை அணைத்துக் கொண்டாள். மேல் விலாசம் எழுதிக் கொடுத்தாள்.

பாபு கடிதத்தைத் தபால் பெட்டியில் போட விரைந்து ஓடினான். வழி

"உனக்கே தெரியாது என்றால், எங்களுக்கு எப்படித் தெரியும்? ஆனால் ஊரில் அதைப் பற்றிப் பலவிதமாய்ப் பேசிக் கொள்கிறார்கள்."

"ஊரில் என்ன பேசிக் கொள்ளுகிறார்கள்?"

"சம்பந்தி வீட்டாருக்கு ஏதோ ஒரு மொட்டைக் கடிதம் இந்த ஊரிலிருந்து போனதாகச் சொல்லிக் கொள்கிறார்கள்."

"அப்படி அந்த மொட்டைக் கடிதத்தில் என்ன எழுதியிருந்ததாம், கலியாணம் நின்று போகும்படி?"

"தேவகி வேறொரு பையன் மீது காதல் கொண்டிருப்பதாக அந்தக் கடிதத்தில் எழுதி யிருந்ததாம்."

"இது என்ன முட்டாள்தனம்? ஒரு மொட்டைக் கடிதத்தை நம்பியா கலியாணத்தை நிறுத்தி விடுவார்கள்? அந்த சம்பந்திகள் அவ்வளவு முட்டாள்களா?"

"இல்லை, அப்பா! அதில் இன்னொரு சூட்சுமம் இருக்கிறது. அந்த மொட்டைக் கடிதம் கலியாணப் பெண் தேவகி எழுதியது போலவே எழுதி யிருந்ததாம். அதில் அந்தப் பெண் தான் காதலிப்பது இன்னார் என்று கூட எழுதி யிருந்தாளாம்......"

என் நெஞ்சு இப்போது தடக், தடக் என்று அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. மேலே வைத்தி என்ன சொல்லப் போகிறான் என்பதைத் தெரிந்து கொள்ள அவ்வளவு ஆவலாயிருந்தது.

"அப்புறம்?" என்றேன்.

"தேவகி யார் பெயரைக் குறிப்பிட்டிருப்பாள் என்று நீதான் சொல்லேன், பார்க்கலாம்."

"எனக்கு எப்படித் தெரியும்? கடிதத்தை நான் பார்க்கவில்லையே?"

"பார்க்காவிட்டால் என்ன? உனக்குத் தெரியாமலா இருக்கும்?"

"தெரியவே தெரியாது. மொட்டைக் கடிதத்தைப் பற்றிய செய்தியே இப்போது நீங்கள் சொல்லித்தான் எனக்குத் தெரியும்."

"ஆமாம், அப்பா, ஆமாம்! உனக்கு ஒன்றுமே தெரியாது. நீ பால் மணம் மாறாப் பாலகன். நான் கேள்விப்பட்டதைச் சொல்கிறேன். இதற்காக என்பேரில் கோபித்துக் கொள்ளாதே! அந்தக் கடிதத்தில் தேவகி உன்னுடைய பெயரைக் குறிப்பிட்டு உன்னை அவள் காதலிப்பதாக வெட்ட வெளிச்சமாய் எழுதி யிருந்தாளாம்!"

"சிவ சிவா! பொய்! சுத்தப் பொய்!" என்றேன் நான். ஆயினும் என் நெஞ்சு ஏன் அப்படி விம்மி மேலெழுந்தது? என் தலைக்குள் ஏன் அவ்வளவு பெரிய அலைகள் குமுறி மோதின?

சுந்தரம் மேலும் கூறினான்:—"இன்னொரு விஷயங்கூட ஊரில் பேசிக் கொள்கிறார்கள், கிட்டா! உனக்குத் தெரிந்திருப்பது நல்லது என்று சொல்கிறேன். உண்மையில் தேவகி அந்தக் கடிதத்தை எழுதவில்லை யென்றும், தேவகி எழுதியது போல, அவளுடைய எழுத்தை 'போர்ஜரி' செய்து வேறு யாரோ எழுதிவிட்டார்கள் என்றும் சொல்கிறார்கள்."

"ஐயோ! இது என்ன அநியாயம்? அப்படி யார் செய்திருப்பார்கள்?"

"என்னடா அப்பா, பரமசாதுவைப் போல் பேசுகிறாயே? நீ தான் அந்தப் 'போர்ஜரி'க் கடிதம் எழுதினாய் என்றல்லவா ஊரில் பேச்சாயிருக்கிறது?"

எனக்கு வந்த கோபத்துக்கும் ஆத்திரத்துக்கும் அளவேயில்லை. என் பொறுமை அதன் எல்லைக்கு வந்து விட்டது. கடைசியாக ஒரு பெரு முயற்சி செய்து "வைத்தி! சுந்தரம்! நீங்கள் என்னோடு சண்டை பிடிப்பதற்காக வந்திருக்கிறீர்களா? அப்படியானால் சொல்லிவிடுங்கள். தலையைச் சுற்றி மூக்கைத் தொடுவானேன்?" என்று கேட்டேன்.

"சேச்சே! அதெல்லாம் ஒன்றுமில்லை, அப்பா! உன்னோடு சண்டை பிடித்து எங்களுக்கு இப்போது என்ன ஆகவேணும்? இது நல்லவர்களுக்குக் காலம் இல்லை. ஏதோ நீ எங்கள் 'கிளாஸ்—மேட்' ஆயிற்றே, வெளியே பேசிக் கொள்வதை உன் காதிலே போட்டு வைக்கலாம் என்று வந்தால், நீ இப்படிச் 'சண்டைக்கு வந்திருக்கிறீர்களா?' என்று கேட்கிறாய். அழகாய்த்தானிருக்கிறது. நாங்கள் போகிறோம்!" என்று சொல்லி விட்டு இருவரும் போய்த் தொலைந்தார்கள். அறைக்கு வெளியில் போனதும் அவர்கள் சிரித்துக்கொண்டுபோன சத்தம் என் காதில் விழுந்தது. (தொடரும்)

நடந்தபோது எட்டுத் திசைகளும் சுழன்றன. சூரியன் இருண்டு பட்டப் பகல் நள்ளிரவாயிற்று. வானம் இடிந்து என் தலையில் விழுந்து அமுக்கி மூச்சுவிட முடியாமல் திணறச் செய்தது. இந்த நிலையில் எப்படியோ தட்டித் தடுமாறித் தள்ளாடி என்னுடைய அறைக்குப்போய்ச் சேர்ந்தேன்.

## 7

கழுகுக்கு மூக்கில் வேர்க்கும் என்று ஒரு பழமொழி உண்டு. சமீபத்தில் எங்கேயாவது இரை கிடைப்பதாயிருந்தால் கழுகுக்கு மூக்கில் வேர்க்குமாம்! வைத்திக்கும் சுந்தரத்துக்கும் அப்படியே மூக்கில் வேர்க்கும்போலிருக்கிறது. நான் வந்திருப்பதையும் என்னுடைய மன நிலையையும் தெரிந்து கொண்டு அவர்கள் என்னுடைய அறைக்கு வந்து சேர்ந்தார்கள். அவ்வளவாக நான் அவர்களுடன் பழக்கம் வைத்துக் கொள்வதில்லை யென்று சொல்லி யிருக்கிறேன். ஆயினும் விஷமிகளுக்கு வெட்கம் ஏது? என்னைத் தேடி வந்து சேர்ந்தார்கள்.

எனக்கு ஏற்பட்டிருந்த துக்கத்தையும் அவர்கள் பேரில் வந்த கோபத்தையும் வெகு பிரயாசைப் பட்டு நான் அடக்கிக் கொண்டேன். கொஞ்சம் நான் பொறுமையாயிருந்தால், தேவகியின் கலியாணம் தடைப்பட்ட காரணத்தை அவர்களிடமிருந்து தெரிந்து கொள்ளலாம் என்று என்னுடைய உள்ளுணர்ச்சி சொல்லிற்று.

"எங்கே அப்பா வந்தீர்கள்? என்ன விசேஷம்!" என்று கேட்டேன்.

"என்ன விசேஷமா? ஊரெல்லாம் ஒரே அமர்க்களமா யிருக்கிறது: 'என்ன விசேஷம்' என்று மெள்ளக் கேட்கிறாயே? ஹெட்மாஸ்டர் பெண்ணின் கலியாணம் நின்று போனது உனக்குத் தெரியாதா?" என்றான் வைத்தியநாதன்.

"அது தெரியாமல் இருக்குமா? தெரியும். அதற்காக நாம் என்னத்தைச் செய்வது?" என்றேன் நான்.

"என்னத்தைச் செய்வதாவது? ஏன்? பேஷாகச் செய்யலாம். நம்மில் யாராவது ஒருவர் தேவகியைக் கலியாணம் செய்து கொள்ளலாம். 'போட்ட பந்தலைப் பிரிக்க வேண்டாம்' என்று ஹெட் மாஸ்டரிடம் சொல்லலாம்" என்றான் சுந்தரம்.

"பேஷான யோசனைதான். இதை நீ ஹெட்மாஸ்டரிடம் சொல்லிப் பார்ப்பதுதானே? என்னிடம் சொல்லி என்ன பிரயோஜனம்?" என்றேன்.

"ஹெட்மாஸ்டரிடமும் அவருடைய குடும்பத்தாரிடமும் நீ தேவதா விஸ்வாசம் வைத்திருந்தாயே என்று உன்னிடம் சொன்னோம். நீ என்னடா என்றால், ஏனோ தானோ என்று பேசுகிறாய். அது போனால் போகட்டும். கலியாணம் ஏன் நின்றது என்பதைப் பற்றி உனக்குக் காரணம் தெரிந்திருக்குமே?" என்றான் வைத்தி.

"எனக்குத் தெரியாது, அப்பா, எனக்கு ஒன்றும் தெரியாது."

"சும்மாச் சொல்கிறாய்! உனக்குத் தெரியாமல் இருக்குமா?"

"சத்தியமாய் எனக்குத் தெரியாது. உங்களுக்குத் தெரிந்திருந்தால், சொல்லுங்கள்! கேட்கிறேன்."





உன்னைப் பள்ளிக்கூடத்திலிருந்து 'டிஸ்மிஸ்' செய்யவேண்டும். அதற்கு வேண்டிய முகாந்திரம் இருக்கிறது. ஆனால் நீ தகப்பனில்லாத ஏழைப் பையன். நீ எப்பேர்ப்பட்ட பெரிய தீங்கு செய்திருந்தபோதிலும் உன்னை அடியோடு கெடுத்துவிட எனக்கு விருப்பமில்லை. நாளைக்குப் பள்ளிக்கூடம் வந்தாயானால் உனக்கு 'டிரான்ஸ்பர் சர்டிபிகேட்' கொடுத்து விடுகிறேன். எப்படியும் இந்த வருஷம் போனது போனதுதான். அடுத்த வருஷத்தில் வேறு எந்த ஊர் ஹைஸ்கூலிலாவது சேர்ந்துபடி. இங்கே செய்ததுபோல் அயோக்கியத்தனம் செய்யாமல், யோக்கியமாக நடந்து கொள்! என்னால் உன்னை மன்னிக்க முடியாது. கடவுளிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள். கடவுளின் கருணை எல்லையற்றது. அவர் ஒருவேளை உன்னை மன்னித்தாலும் மன்னிக்கக் கூடும்!''

மேற்கூறிய வார்த்தைகளை அப்படியே ஹெட்மாஸ்டர் கூறியதாக நான் உறுதி சொல்ல முடியாது. இம்மாதிரி தோரணையில் பேசினார் என்றுதான் சொல்லலாம். ஏற்கெனவே கலக்கமுற்றிருந்த என் மனதில் அவர் கூறிய வார்த்தைகள் அவ்வளவு தெளிவாகப் பதியவில்லை. எல்லாம் ஒரே குழப்பமாயிருந்தது. ஆயினும் விஷயம் என்னவென்பது விளங்கி விட்டது. நான் ஏதோ மன்னிக்க முடியாத பெரிய குற்றம் செய்து விட்டேன். அதனால் அந்த ஊர்ப் பள்ளிக்கூடத்தில் இனி நான் படிக்கமுடியாது. அந்த வருஷம் வேறு ஊர்ப் பள்ளிக்கூடத்தில் போய்ச் சேர்ந்து படிக்கவும் முடியாது. ஒரு வருஷம் போனதுதான்!

படிப்பைப் பற்றி அவ்வளவாக நான் கவலைப்படவில்லை; வாழ்நாளில் ஒரு வருஷம் என்ன பிரமாதம்? ஆனால் ஹெட்மாஸ்டர் என் விஷயத்தில் அவ்வளவு கொடூரமாக நடந்து கொண்டதுதான் சொல்ல முடியாத துன்பத்தை அளித்தது. அப்படிப்பட்ட தண்டனை பெறுவதற்கு நான் குற்றம் என்ன செய்தேன்? 'குற்றம் என்ன?' 'குற்றம் என்ன?' என்று என் உடம்பில் உள்ள ஒவ்வொரு அணுவும் துடிதுடித்துக் கேட்டது; ஒவ்வொரு நரம்பும் அலறி அழுது கேட்டது.

தயங்கித் தட்டுத் தடுமாறி என் நாவும், ''ஸார்! நான் என்ன குற்றம் செய்தேன்? எதற்காக என்னைப் பள்ளிக்கூடத்திலிருந்து தள்ளுகிறீர்கள்?'' என்று கேட்டது.

''அட அயோக்கியா! கேள்வி வேறு கேட்கிறாயா? போ! என் கண் முன் நிற்காமல் போய்த் தொலை! இனி என் முகத்திலேயே விழிக்காதே! இங்கே நின்றாயோ உன்னைக் கொன்று விடுவேன். மேலே ஒரு வார்த்தை பேசினாலும் உன்னை 'டிஸ்மிஸ்' செய்து விடுவேன்! கெட் அவுட்!'' என்று ஹெட்மாஸ்டர் கூச்சலிட்டார்.

மேலே நான் அங்கு நின்றால், என்னை அவர் கொல்வது ஒருபுறமிருக்கட்டும்; வரம்பு மீறிய கோபத்தினால் அவருடைய உயிருக்கே ஏதாவது ஆபத்து நேர்ந்துவிடும் என்று தோன்றியது. விம்மிக்கொண்டே அந்த வீட்டிலிருந்து வெளியேறினேன். பந்தலில் இருந்த கீத்துகளை யெல்லாம் இதற்குள் பிரித்துக் கீழே போட்டிருந்தார்கள். கம்புகள் மட்டும் நின்றன. போகிற போக்கில் அந்தக் கம்புகளில் ஒன்றைப் பிடுங்கிக் கீழே தடாரென்று போட்டுவிட்டுப் போனேன். வீதியில்

அடித்துக் கொண்டேனே, அதை இவர்கள் கேட்டால்தானே? அப்போது நான் சொன்னதைக் கேட்கவில்லை; இப்போது நன்றாய் அவமானப் பட்டார்கள். இவர்களுக்கு நன்றாய் வேண்டும்! இதுவும் வேண்டும்; இன்னமும் வேண்டும்!'' என்றான். தேவகியின் இனிய குரலில் அவ்வளவு குரோதம் எப்படி வந்து புகுந்தது என்று ஆச்சரியப்பட்டேன்.

"என்ன காரணம்? கலியாணம் ஏன் நின்றது?'' என்று கேட்டேன்.

"என்ன காரணமோ! என்னைக் கேட்டால், எனக்கு என்ன தெரியும்? அப்பாவும் அம்மாவும் என்னைப் பிடுங்கி எடுப்பது போதாது என்று நீ வேறே கேள்வி கேட்பதற்கு வந்து விட்டாயா?'' என்றாள் தேவகி.

கோபத்திலும் ஆத்திரத்திலும் மரியாதை கூடத் தவறிவிட்டாள்! ஆயினும் அதற்காக அவளைக் குற்றம் சொல்ல என் மனம் இடம் கொடுக்கவில்லை.

இந்தச் சமயத்தில் வீட்டு வாசலில் ஹெட்மாஸ்டரின் குரல் கேட்டது.

"ஏண்டா! இன்னுமா பந்தலைப் பிரித்தாகவில்லை? சீக்கிரம் பிரித்து எறிந்து விட்டுத் தொலையுங்களடா!'' என்று பத்மநாப ஐயங்கார் சத்தமிட்டுக் கத்தினார். அது ஹெட்மாஸ்டரின் குரல்தானா? ஆமாம், அவருடைய குரலேதான்! ஹெட்மாஸ்டரின் குரல்தான் அவ்வளவு கர்ணகடூரமாகியிருக்கிறது!

பாவம்! ஹெட்மாஸ்டருக்கு மனதில் எவ்வளவு தாபம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பது ஊகிக்கக்கூடியதுதானே? அவருக்கு ஆறுதல் சொல்ல வேண்டும் என்றும், என்ன விதமாக ஆறுதல் சொல்லுவது என்றும் யோசித்தேன். யோசித்துக் கொண்டே வீட்டு வாசற்புறம் போக நாலு அடி எடுத்து வைத்தேன். இதற்குள் பத்மநாப ஐயங்கார் உள்ளே வந்து விட்டார். வந்தவர், என்னைப் பார்த்தார். ஐயோ! அந்தப் பார்வை! சிவபெருமான் நெற்றிக் கண்ணைத் திறந்து பார்த்துத் திரிபுரத்தை எரித்துவிட்டார் என்பதில் எனக்குச் சிறிதும் அதிசயம் கிடையாது! ஆனால் அன்றைக்குத் தேவகி



யின் தகப்பனார் என்னைப் பார்த்த பார்வை என்னை ஏன் எரிக்கவில்லை என்பதைப் பற்றிய அதிசயந்தான் இன்னமும் எனக்குத் தீரவில்லை.

சற்று நேரம் தீ எழும் கண்களால் என்னைப் பார்த்துக்கொண்டேயிருந்தவர், சட்டென்று நிதானித்துச் சமாளித்துக்கொண்டு, "ஓகோ! நீ வேறு துக்கம் விசாரிக்க வந்து விட்டாயா! சரி! இங்கே வா!'' என்று சமிக்ஞையும் காட்டிவிட்டு அவருடைய சொந்த அறைக்குள் நுழைந்தார். உடலெல்லாம் பதற, நெஞ்சு பட படவென்று அடித்துக் கொள்ள நானும் உள்ளே போனேன். இதற்குள் அவர் நிதானித்துக்கொண்டு விட்டதாகத் தோன்றியது. குரலில் அவ்வளவு கடுமையில்லை; சாவதானமாகத்தான் பேசினார். ஆனால் அவர் கூறிய விஷயம் என்னைக் கதிகலங்க அடித்து விட்டது.

"கிருஷ்ணசாமி! நான் சொல்வதைச் சரியாக வாங்கிக்கொள். பதில் பேசாதே! இனிமேல் நீ இந்த ஊரில், என்னுடைய பள்ளிக்கூடத்தில், படிக்கச் சௌகரியப் படாது. நியாயமாக

எப்படிப் பதில் சொல்ல முடியும்?'' என்றாள். இதிலிருந்து தேவகியின் ஆட்சேபமெல்லாம் வெளிப்படைக்குத்தான் என்று நான் தீர்மானித்துக் கொண்டேன். பிறகு "இந்தமாதிரியெல்லாம் அசந்தர்ப்பமாய்ப் பேசாதே! கலியாணம் பண்ணிக் கொள்ளாமல் 'நன்னரி'யில் சேர்ந்து விடுவதெல்லாம் ஐரோப்பியர்களுக்குச் சரி; ஹிந்துக்களாகிய நமக்குச் சரிப்படுமா? அந்தமாதிரி எண்ணத்தை அடியோடு மறந்து விடு! அப்பா அம்மா சொல்கிறபடி கேளு!'' என்று அழுத்தமாய்ப் புத்திமதி சொல்லத் தொடங்கினேன். "இப்போது இப்படித்தான் 'கலியாணம் வேண்டாம்' என்று சொல்லிக் கொண்டிருப்பாய். நானேக்குக் கலியாணம் ஆகிவிட்டால் என்னையெல்லாம் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டாய். 'கிட்டா' என்று ஒருவன் இருக்கிறான் என்பதையே மறந்து போய் விடுவாய்!'' என்று சில சமயம் பரிகாசமும் செய்தேன்.

இந்தமாதிரி நாங்கள் பேசிக் கொண்டிருக்கும் சமயத்தில் ஹெட்மாஸ்டரோ அல்லது மாமியோ வந்து விட்டால், உடனே தேவகி பேச்சை நிறுத்தி விட்டு யோசனையில் ஆழ்ந்து விடுவாள். அவள் அப்படி என்ன யோசனை செய்தாள் என்பது அவளுக்கும் அவளுடைய அந்தராத்மாவுக்குந்தான் தெரியும். பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் அந்த பரந்தாமனுக்கும் ஒரு வேளை தெரிந்திருக்கலாம்.


— சந்திரா

6

கலியாணத் தேதி குறிப்பிட்டாகி விட்டது. பந்தக்கால் முகூர்த்தம் நடந்து, கலியாணக் கடுதாசி அச்சிடவும் கொடுத்தாகி விட்டது. கலியாணத்துக்கு வேண்டிய சாமான்களில் பாதிக்குமேலே சேகரம் செய்தாகி விட்டது. மணப் பெண்ணுக்கு நிச்சய தார்த்தப் புடவையும் மாப்பிள்ளைக்கு முகூர்த்த வேஷ்டியும்கூட வாங்கியாகி விட்டது. இவ்வளவு ஏற்பாடுகளும் ஆன பிறகு, திடீரென்று 'ஹெட்மாஸ்டர் பெண்ணின் கலியாணம் நின்று போய்விட்டது' என்ற வதந்தி ஊரில் பரவியது.

என் தாயாரைப் பார்ப்பதற்காக இரண்டு நாள் நான் கிராமத்துக்குப் போயிருந்து திரும்பி வந்தேன். திரும்பி வந்தவுடனே அந்தச் செய்தி காதில் விழுந்தது. என்னால் நம்ப முடியவே யில்லை. உண்மையை அறிந்து கொள்வதற்காக அவசர அவசரமாக ஹெட்மாஸ்டர் வீட்டுக்குப் போனேன். வீட்டு வாசலில் கலியாணத்துக்காகப் போட்டிருந்த பந்தலை ஆட்கள் அப்போதுதான் பிரித்துக் கொண்டிருந்தார்கள். இந்தக் காட்சி என் மனதில் சொல்ல முடியாத வேதனையை உண்டு பண்ணியது. வீட்டுக்குள்ளே போனேன். ஹெட்மாஸ்டராவது, அவர் மனைவியாவது அங்கே காணப்படவில்லை. தேவகி மட்டும் கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்து ஆடிக் கொண்டிருந்தாள். சந்திரபிம்பம் போன்ற அவளுடைய முகம் வாடி வதங்கியிருந்தது. அவளுடைய தலை மயிர் அவிழ்ந்து தொங்கியது. கன்னங்களில் கண்ணீர் வழிந்தோடியதின் அடையாளங்கள் காணப்பட்டன.

"தேவகி! இது என்ன? பந்தலை ஏன் பிரிக்கிறார்கள்? நான் கேள்விப்பட்டது உண்மையா?'' என்றேன்.

"ஆமாம், கிட்டா! உண்மைதான். கலியாணம் நின்று போய்விட்டது. நான் 'வேண்டாம் வேண்டாம்' என்று

கடவுளுடைய கருணை. பெருமாளையும் தாயாரையும் ரங்கநாயகி அம்மாள் சேவித்ததின் பலன் கைமேல் கிடைத்து விட்டது. எனக்கும் ஒரு பெரிய பொறுப்புத் தீர்ந்தது. ஹெட்மாஸ்டரிடம் நான் கொண்டிருந்த பக்திக்கு எவ்விதமான களங்கமும் சொல்வதற்கு இனிமேல் யாரும் துணிய மாட்டார்கள் அல்லவா?

இத்தகைய எண்ணங்களினால் நான் அளவிலாத உற்சாகமடைந்து கலியாண ஏற்பாடுகளில் தீவிரமாக ஈடுபட்டேன். முன்போல் பெரும்பாலும் ஹெட்மாஸ்டர் வீட்டிலேயே காலங் கழிக்கத் தொடங்கினேன். பந்தலை அப்படிப் போடவேண்டும், மேளத்துக்கு இன்னாரைச் சொல்லவேண்டும், சமையலுக்கு இன்னாரை ஏற்பாடு செய்ய வேண்டும், இன்னின்ன சாமான்களை இன்னின்ன இடத்தில் வாங்கிச் சேகரம் செய்ய வேண்டும், கலியாணக் கடுதாசி இப்படி அச்சடிக்க வேண்டும் என்பதைப் பற்றி யெல்லாம் இடைவிடாமல் மாமியுடன் விவாதித்து வந்தேன். கலியாண ஏற்பாடுகள் சம்பந்தமாக என்னால் இயன்ற ஒத்தாசைகளையும் மாமிக்குச் செய்து வந்தேன்.

ஆனால் இந்தக் கலியாண ஏற்பாடுகளிலும் பேச்சு வார்த்தைகளிலும் கொஞ்சங்கூட உற்சாகங் காட்டாமலிருந்தாள் தேவகி. "எனக்குக் கலியாணத்துக்கு இப்போது என்ன அவசரம்? அம்மாவும், அப்பாவும் பைத்தியம் பிடித்து அலைகிறார்கள்! கொஞ்சங்கூட எனக்குப் பிடிக்கவில்லை!" என்று தேவகி அடிக்கடி சொன்னாள். சாதாரணமாகக் கன்னிப் பெண்கள் எல்லாருமே கலியாணப் பேச்சு வந்தால் இப்படிப் பிடிக்காதது போலக் காட்டிக் கொள்வதுண்டு. தேவகியும் அவ்விதந்தான் வெளிக்குச் சொல்லுகிறாள் என்று முதலில் நினைத்தேன். அவள் அப்படிப் பேசும்போதெல்லாம் பரிகசித்துச் சிரித்தேன். போகப் போக, தேவகி உண்மையாகவே கலியாணத்தை ஆட்சேபிக்கிறாளோ என்ற சந்தேகம் உதித்தது. அப்போது அவளிடம் எதிர்க்கட்சி பேசிப் புத்திமதியும் சொன்னேன். "உன் தாயார் தகப்பனாருக்கு நீ ஒரே பெண். உனக்குக் காலா காலத்தில் கலியாணம் பண்ணிப் பார்க்க வேண்டும் என்று அவர்களுக்கு ஆசையாயிராதா? அதை நீ ஆட்சேபித்து என்ன லாபம்? இந்த மாதிரி வரன்தான் சுலபத்தில் கிடைக்குமா? பையன் பி. ஏ. படிக்கிறானாம்!..." என்று வரனைப் பற்றி வர்ணிக்கத் தொடங்கினேன். அதற்குத் தேவகி, "பி. ஏ. என்றால் அவ்வளவு அதிசயமா? எத்தனையோ ஆயிரம் பேர்கள் பி. ஏ. படிக்கிறார்கள். கலியாணம் செய்து கொள்ள எனக்கு இஷ்டம் இருக்க வேண்டாமா? இந்தக் காலத்தில் 'பெண்கள் விடுதலை' என்றும், அது வென்றும், இது வென்றும் பேசுகிறார்களே? நான் 'கலியாணம் வேண்டாம்' என்று சொல்லும்போது என்னை நிர்ப்பந்தப் படுத்துவது என்ன நியாயம்? எல்லாம் தெரிந்த எங்கள் அப்பாவே இப்படிச் செய்கிறதுதான் எனக்கு அர்த்தமாக வில்லை! நீங்களாவது என் அப்பா — அம்மாவிடம் கொஞ்சம் எனக்காகப் பேசுவீர்கள் என்று நினைத்தேன். நீங்களும் அவர்களுடைய கட்சி பேசுவது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது?" என்றாள். இதைக் கேட்டதும் எனக்கு உண்மையாகவே கொஞ்சம் தயக்கம் உண்டாகிவிட்டது. ஒருவேளை தேவகிக்கு இஷ்டமில்லாத பையனுக்கு அவளைப் பலவந்தமாகக் கலியாணம் செய்து கொடுத்துவிடப் பிரயத்தனம் செய்கிறார்களோ என்ற கவலை ஏற்பட்டது.

"ஆமாம், தேவகி! அந்தப் பையனை உனக்கு உண்மையாகவே பிடிக்கவில்லையா, என்ன? அப்படியானால்..." என்பதற்குள், தேவகி, "அப்படியானாலுமில்லை, இப்படியானாலுமில்லை. அந்தப்பையனை எனக்குப் பிடிக்கிறதா, இல்லையா என்ற கேள்வி எங்கே வந்தது? சாப்பாடே இல்லையென்று சொல்லும்போது 'இலை பொத்தல்' என்று புகார் சொன்ன கதையாக அல்லவா இருக்கிறது? எனக்குக் கலியாணம் பண்ணிக் கொள்ளவே இஷ்டமில்லை. பி. ஏ., எல். டி., பாஸ்செய்துவிட்டு 'டீச்சர்' உத்தியோகத்துக்குப் போய்ச் சுதந்திரமாய் வாழ வேண்டும் என்று எனக்கு விருப்பமாயிருக்கிறது. மாப்பிள்ளையைப் பிடித்திருக்கிறதா, இல்லையா என்று என்னைக் கேட்டால் என்ன பிரயோஜனம்? என்னைப் பார்க்கவந்த பையனை நான் முகம் எடுத்துப் பார்க்கவேயில்லை. பின்னே,

இருந்தாய். பாவம்! ஊரில் உள்ளவர்கள் சேர்ந்து உன்னை ஆகவொட்டாமல் அடித்து விட்டார்கள். ஆனால் நீ கொஞ்சங்கூடக் கவலைப்படாதே! நான் இவரிடம் சொல்லிச் சரிப்படுத்தி விடுகிறேன். பெருமாள் சந்நிதியிலும் தாயார் சந்நிதியிலும் நான் இன்றைக்கு உனக்காகவே வேண்டிக் கொள்ளப் போகிறேன்!'' என்றான். இந்த அன்பான வார்த்தைகளினால் என் மனம் மேலும் உருகிவிட்டது. பெருமாளையும் தாயாரையும் சேவிக்கும்போது அன்றைக்கு நானும் அவ்விதமே வேண்டிக் கொண்டேன். "ஹெட்மாஸ்டருக்கு என் பேரில் இருந்த அன்பும் மதிப்பும் முன் போலவே ஏற்படவேண்டும்'' என்று பிரார்த்தித்தேன்.

என்னுடைய பிரார்த்தனையும் மாமியின் பிரயத்தனமும் வீண் போகவில்லை. சில நாளைக்கெல்லாம் ஹெட்மாஸ்டர் பழையபடி என்மேல் பிரியமாயிருக்கத் தொடங்கினார். இது எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சி தந்தது. ஆயினும் நான் ஊருக்குப் பயந்து, அதாவது மற்றப் பையன்களின் வம்புப் பேச்சுக்குப் பயந்து, கொஞ்சம் ஜாக்கிரதையாகவே நடந்து கொண்டேன். முன்போல் தினசரி இரண்டு வேளையும் ஹெட்மாஸ்டர் வீட்டுக்குப் போவதில்லை. அடியோடு போகாமல் இருப்பதுமில்லை. வாரத்துக்கு இரண்டு மூன்று தடவை போய்ப் பார்த்துப் பேசி விட்டு வருவேன். தேவகியாவது மாமியாவது கேட்டால், "இந்த வருஷம் எஸ். எஸ். எல். சி. பரீட்சைக்குப் போகவேண்டும் அல்லவா? பாடங்கள் கஷ்டமா யிருக்கின்றன. சிரத்தையாகப் படிக்க வேண்டி யிருக்கிறது. படித்து நல்ல மார்க் வாங்கிப் பாஸ் செய்தால்தானே பள்ளிக்கூடத்துக்குக் 'கிதாப்' உண்டாகும்? ஹெட்மாஸ்டருக்கும் நல்ல பெயர் ஏற்படும்?'' என்று பதில் சொல்வேன். ஆனால் ஹெட்மாஸ்டரிடமும் அவருடைய குடும்பத்தாரிடமும் என் மனதில் ஏற்பட்டிருந்த அபிமானம் மட்டும் எள்ளளவும் குறையவில்லை.

இப்படிச் சில மாதங்கள் சென்றன. அரை வருஷப் பரீட்சை முடிந்து கிறிஸ்மஸ் விடுமுறையும் கழிந்தது. தை மாதம் பிறந்தது. 'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்று ஒரு பழமொழி உண்டு அல்லவா? எனக்கும் ஒரு வழி பிறந்தது. அதாவது ஹெட்மாஸ்டர் வீட்டில் முன்போல் எனக்கு நெருக்கமான பழக்கம் ஏற்படுவதற்கு ஒரு வழி பிறந்தது. அது, தேவகிக்குக் கலியாணம் நிச்சயமான செய்திதான்!

கிறிஸ்மஸ் விடுமுறைக்காக நான் கிராமத்துக்குப் போய்விட்டுத் திரும்பியதும் இந்தச் செய்தியை அறிந்தேன். ஹெட்மாஸ்டரும் அவர் மனையாளும் எனக்கு ஆள்மேல் ஆள் விட்டார்கள். நானும் அவசரமாய் அவர்கள் வீட்டுக்குப் போனேன். "தேவகிக்குக் கலியாணம் நிச்சயமாகி யிருக்கிறது'' என்கிற செய்தியைக் குதூகலத்துடன் சொன்னார்கள். வரனும் ரொம்ப நல்ல வரன் என்று தெரிந்தது. எங்கள் ஹெட்மாஸ்டர் மிக நல்ல மனிதர்; அவருடைய மனையாளோ மகா உத்தமி. அப்படிப்பட்ட தம்பதிகளுடைய ஆசை நிறைவேறாமற் போகுமா? "உங்களுடைய குணத்துக்குத்தான் இவ்வளவு நல்ல வரன் கிடைத்தது'' என்று சொன்னேன். பையன் ஒரு தாசில்தாருடைய மகன். பி. ஏ. படித்துக் கொண்டிருந்தான். வரதட்சணை கூட அதிகம் கேட்க வில்லையாம். பெண்ணின் அழகையும் சமர்த்தையும் பார்த்து அதிக நிபந்தனை ஒன்றும் போடாமல் கலியாணத்துக்கு ஒப்புக் கொண்டு விட்டார்களாம்.

முன்னே யெல்லாம் 'தேவகிக்குக் கலியாணம்' என்ற பேச்சு எனக்குக் கிலேசத்தை அளித்தது என்று சொன்னேன் அல்லவா! இப்போது கலியாணம் நிச்சயமாகி விட்டது என்று தெரிந்ததும் எனக்கு எந்தவிதமான கிலேசமும் ஏற்படவில்லை. என் தலையில் இருந்த சுமையும் இருதயத்தை அழுக்கிய பாரமும் இறங்கிவிட்டது போன்ற உணர்ச்சி உண்டாகிக் குதூகலம் ஏற்பட்டது. தேவகியின் சமர்த்துக்கும் அழகுக்கும் இவ்வளவு நல்ல வரனுக்குக் கலியாணம் ஆகவேண்டியது நியாயந்தான். பத்மநாப ஐயங்கார்—ரங்கநாயகி அம்மாளின் உத்தம குணத்துக்கு, அவர்களுக்கு இப்படிப்பட்ட மாப்பிள்ளை கிடைக்க வேண்டியதும் நியாயந்தான். எல்லாம்




## 5

ஒரு நாள் ரங்கநாயகி அம்மாள் என்னைக் கூப்பிட்டு அனுப்பி, "கிட்டா! கோவிலுக்குப் போய்ப் பெருமாளையும் தாயாரையும் சேவித்து விட்டு வர வேணும். நீ என் கூட வருகிறாயா?" என்று கேட்டாள். மாமியின் அன்புக்கு மாறு சொல்ல முடியாமல் சம்மதித்தேன். மாமியுடன் நான் கோவிலுக்குப் போவதை யாராவது பையன்கள் பார்த்தால், "கிச்சாமி மறுபடியும் ஹெட்மாஸ்டர் வீட்டு மாமியைக் காக்காய் பிடிக்கிறான்!" என்று சொல்லிப் பரிகசிப்பார்கள் என்பது தெரிந்துதானிருந்தது. அதையெல்லாம் நான் பொருட்படுத்தவில்லை. தைரியமாகப் பூஜை சாமான்களை எடுத்துக் கொண்டு மாமியைத் தொடர்ந்து போனேன். வழியில் மாமி அநுதாபம் நிறைந்த குரலில், "கிட்டா! என்னிடம் நீ நிஜத்தைச் சொல்லிவிடு. இவருக்கு—தேவகியின் அப்பாவுக்கு—உன் பேரில் என்ன கோபம்? நீ என்ன அப்படிப்பட்ட குற்றத்தைச் செய்து விட்டாய்? எதுவாயிருந்தாலும் என்னிடம் சொல்லிவிடு! நான் அவரிடம் பேசிச் சரிப்படுத்துகிறேன்!" என்றாள். மாமியின் அன்பு என்னை உருக்கி விட்டது. அழமாட்டாக் குறையாக நான் உண்மையைச் சொல்லி விட்டேன். உண்மை என்றால், வைத்தியநாதன் உளறியதை அப்படியே சொல்லி விடவில்லை. ஒரு மாதிரி அவனுடைய வம்புப் பேச்சைப் பற்றிக் குறிப்பாகச் சொல்லி, அதனால் நேர்ந்த சண்டையைப் பற்றியும் சொன்னேன்.

இதைக் கேட்ட மாமி, "அழகாயிருக்கிறது! இதற்குத்தானா உன் பேரில் எரிந்து விழுகிறார்? ஊரிலே நாலு காலாடிகள் ஏதாவது பேசிக் கொண்டுதானிருப்பார்கள். இப்படி நடக்கலாம் என்று நான் எதிர்பார்த்ததுதானே? 'இந்தப் பட்டிக்காட்டு ஊரில் புருஷப் பிள்ளைகளின் பள்ளிக்கூடத்தில் தேவகியைச் சேர்க்கலாமா?' என்று அப்போதே நான் சொன்னேன். அதைக் கேட்காமல் சேர்த்து விட்டார். இப்போது உன் பேரில் கோபித்துக் கொண்டு என்ன பயன்? ஹெட்மாஸ்டர் என்னமோ ரொம்ப நல்லவர்தான். ஆனால் கேட்பார் பேச்சைக் கேட்கும் சுபாவம் கொஞ்சம் உண்டு. அந்த உதவி வாத்தியார் ஜகதீசய்யர் ஏதோ இல்லாததும் பொல்லாததும் சொல்லி வத்தி வைத்திருக்கிறார். நீ, பாவம், என் வயிற்றில் பிறந்த பிள்ளை மாதிரி எவ்வளவோ விசுவாசமாயிருந்தாய். தேவகிக்கு உடன் பிறந்த தம்பி, தமையன் ஒருவரும் இல்லையே என்ற குறை எனக்கு உண்டு. அந்தக் குறை தீரும்படி நீ அவனுடைய கூடப் பிறந்த தமையன் மாதிரி பிரியமாக

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ காமராஜ் நாடார் காஷ்மீர் சிங்கத்தை மேடைக்கு அழைத்து வருகிறார்.

●

மகாநாட்டுத் தலைவர் ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளை தமது தலைமைப் பிரசங்கத்தைக் குதூகலமாகத் தொடங்குகிறார்.

●

மகாநாட்டு மேடையில் ராஜாஜியும் ஷேக் அப்துல்லாவும் மகிழ்ச்சியுடன் அளவளாவுகின்றனர்.






வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ செங்கல்வ ராயன் காஷ்மீர் பிரதமர் ஷேக் அப்துல்லாவுக்கு வரவேற்பு அளிக்கிறார்.

கர்க்கி, பூனா; ஜே. எம். லாரன்ஸ், கர்க்கி, பூனா; வி. சந்தானம், கர்க்கி, பூனா.

தஞ்சாவூர் ஸ்ரீ எஸ். எம். கந்தசாமிப் பிள்ளை அவர்கள் மூலம் நன்கொடை :—

ஸ்ரீ எஸ்.எம். கந்தசாமிப் பிள்ளை கமலாம்பாள் ஆயில் மில்ஸ், கிழக்கு வாசல், தஞ்சாவூர் 100 0 0

ஸ்ரீ எல். எஸ். எம். கே. பால சுப்பிரமணியம், தஞ்சாவூர் 100 0 0

ஸ்ரீ எல். எஸ். எம். கே. பாண்டு ரங்கம், தஞ்சாவூர் 100 0 0

ஸ்ரீ என். வரதராஜுலு நாயுடு, மளிகை 4 லக்ஷ்மண பிளாஸ்டிக் ஒர்க்ஸ், கீழவாசல், தஞ்சாவூர் 100 0 0

ஸ்ரீ டி. ஆர். பாலசுப்பிரமணிய அய்யர், பொடிக் கடை, கீழ வாசல், தஞ்சாவூர் 100 0 0

உமா பிரிண்டர்ஸ் ஸ்ரீ உமாபதி மூலம் நன்கொடை :—

ஸ்ரீ ஏ. பொன்னுசாமி, 47, அண்ணாபிள்ளைத் தெரு, சென்னை 51 0 0

ஸ்ரீ லாலா கோபிகிருஷ்ண கோகுல்தாஸ், 119, தங்கசாலைத் தெரு, சென்னை 51 0 0

உமா பிரிண்டர்ஸ் தொழிலாளர்கள், 4 32, நாரா முத்தையப்பன் தெரு, ஜி. டி. சென்னை 21 0 0

ஸ்ரீ எஸ். இராமசந்திரன், 'சந்திரா பிக்சர்ஸ்', 7, சின்ன முதலித் தெரு, ஜி. டி. சென்னை. 21 0 0

மெஸர்ஸ் எம். வி. அப்பாசாமி செட்டி அண்டு கம்பெனி, 14, ஜோன்ஸ் தெரு, மண்ணடி, சென்னை 11 0 0

ஸ்ரீ வி. முத்துகிருஷ்ண நாயுடு, 4/32, நாரா முத்தையப்பன் தெரு, ஜி. டி. சென்னை 11 0 0

வலைந்த விஹார், போர்டிங் அண்டு லாட்ஜிங், நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, சென்னை 11 0 0

ஸ்ரீ கொப்பரம் நடேசன் செட்டி, 59, ஆண்டர்சன் தெரு, சென்னை 5 0 0

கோத்தகிரி போர்டு ஹைஸ்கூல் ஆசிரியர், ஸ்ரீ பி. எஸ். யக்ஞேஸ்வரன், மூலம் நன்கொடை :—

ரூ. 2—0—0 அளித்த அன்பர்கள் :—

ஸ்ரீமான்கள் ஏ. கிருஷ்ணன், கோத்தகிரி; எம். கே. நஞ்ச கௌடர், கோத்தகிரி; வி.பி. ராஜாபாதர், கோத்தகிரி; எஸ். நரசிம்மன், கோத்தகிரி; எச். எம். காரி கௌடர், கோத்தகிரி; டி. பி. காரி கௌடர், கோத்தகிரி.

ரூ. 1—0—0 கொடுத்த அன்பர்கள் :—

ஸ்ரீமான்கள் பி. குமரன் நாயர் (1-4-0) கோத்தகிரி; ஆர். கே. சிக்கண்ணச் செட்டியார், கோத்தகிரி; என். ஜெகநாதன், கோத்தகிரி; கே. எம். முத்து கௌடர், கோத்தகிரி; பி. வி. கங்காதர ஐயர், கோத்தகிரி; டி. கே. ராஜகோபாலன், கோத்தகிரி; என். வி. பால், கோத்தகிரி; டி. எஸ். நரசிம்மன், கோத்தகிரி; ஜே. பெல்லன், கோத்தகிரி; ஏ. மாத்தன், கோத்தகிரி; எம். பி. மாதா கௌடர், கோத்தகிரி; டி. கே. ஜோகி கௌடர், கோத்தகிரி; இல்லா காரி, கோத்தகிரி; எம். தங்கவேலுப் பிள்ளை, கோத்தகிரி; எஸ். ஏ. மாதய்யா செட்டியார், கோத்தகிரி; பி. எஸ். யக்ஞேஸ்வரன், கோத்தகிரி; ஜனாப் அப்துல் ரஷீத் சாகேப், கோத்தகிரி; ஒரு ரூபாய்க்குக் குறைவான நன்கொடை (4-1-0)

சிங்கப்பூர் ஸ்ரீ எஸ். சந்திரசேகரன் மூலம் நன்கொடை :—

ரூ. 5—0—0 அளித்த அன்பர்கள் :—

ஸ்ரீமான்கள் எஸ். சந்திரசேகரன், என். ஆர். பட்டணம்; கே. முத்தையா, என். ஆர். பட்டணம்; எம். ஆறுமுகம், வடக்கு நடுவிக் கோட்டை.

ரூ. 3—0—0 கொடுத்த அன்பர்கள் :—

ஸ்ரீமான்கள் வி. முருகையா, வெளிப்பாளையம், நாகப்பட்டினம்; பெ. முத்தையா, தேவபட்டு; ஏ. ஏ. முத்து, சிங்கப்பூர்;

ஸ்ரீ ஆர். நாகராஜன், நாகப்பட்டினம் 2 0 0

கோயமுத்தூர் "வாரத் தூது" அலுவலகத்தின் மூலம் நன்கொடை :—

ரூ. 1—0—0 கொடுத்த அன்பர்கள் :

ஸ்ரீமான்கள் வி. எஸ். கோபாலகிருஷ்ணன், கோவை; வி. வி. ரா. கிருஷ்ணன், கோவை; டி. எஸ். கோபாலகிருஷ்ணன், கோவை. ஒரு ரூபாய்க்குக் குறைந்த நன்கொடை ரூ.5-0-0.

## அரங்கமேடை

காங்கிரஸ் பொருட் காட்சி அரங்கமேடையில் பல அருமையான நாடகங்கள் நடந்தன. ஆயிரக்கணக்கான மக்கள் கண்டு களித்தார்கள். பெரிதும் பாராட்டப் பெற்ற நாடகங்களில் 'அமெச்சூர் ஆக்டர்ஸ்' நடித்த "ஸரஸா" என்னும் நாடகம் ஒன்று. இந்த நாடகத்தில் "நாரதர்" ஆசிரியர் ஸ்ரீ சீனிவாசராவ் கதா நாயகனாக வேடம் தரித்துத் தமது உருக்கமான சோக நடிப்பினால் ரஸிகர்களின் பாராட்டுதலைப் பெற்றார். சக்தி நாடக சபையார் அற்புதமாக நடத்திப் புகழ்பெற்ற பல நாடகங்களில் "நூர்ஜஹான்" சிறந்து விளங்கிற்று. மேற்கூறிய இரு நாடகங்களிலும் நடித்த நடிகர்களையும் கலை நிகழ்ச்சி நிர்வாகிகளையும் எதிர்ப் பக்கத்தில் உள்ள படங்களில் பார்க்கலாம்.

கலைவாணர்
**என். எஸ். கிருஷ்ணன்**



6, வெங்கட்ராமய்யர் தெரு
தியாகராயநகர் : சென்னை
8 - 2 - 50

அன்புள்ள "கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

உலக உத்தமர் மகாத்மா காந்தியின் நினைவுச் சின்னத்தை மகோன்னதமான முறையில் சென்னைக் கடற்கரையிலே எழுப்ப ஏற்பாடு செய்து வருகிறீர்கள். இந்த அருந்தொண்டு இனிது நிறைவேறுமென்பது சர்வ நிச்சயம். இந்தப் பெருங் காரியத்திற்கு நான் அன்புக் காணிக்கையாக ரூ. 1000 சமர்ப்பிக்கிறேன்.

மகாத்மா அமைதியான இமய மலை; அன்பின் திருவுரு; உண்மையின் உயிர் நாடி; தியாகத்தின் சிகரம்; கருணைக் கடல்!

புதிய உலக சமுதாயத்தை மகாத்மா கண்டார். இந்திய விடுதலை அவருடைய இலட்சியப் பாதையில் ஒரு மைல் தூரம்தான். அவர் கண்ட இன்ப உலகிற்குப் போகும் பாதையில்தான் இந்திய விடுதலையை ஒரு தங்குமிடமாக அவர் காட்டினார். இப் பெரியாருக்கு நினைவுச் சின்னங்கள் இந்தியாவில் மட்டுமல்ல, இவ்வுலகமெல்லாம் எழுப்ப வேண்டுமென்பதே எனது பணிவான வேண்டுகோள்.

வாழ்க மகாத்மா நாமம்! வாழ்க குடியரசு! அன்புள்ள,

என். எஸ். கிருஷ்ணன்

சிப் இஞ்ஜினியர்,. செகந்திராபாத்; ஆர். லலிதாபாய், கிருபா ஜுவல்லரி மார்ட், 45, பெரியகடைத் தெரு, பொள்ளாச்சி; கே. சாந்தா தேவி, மேட்டுப்பாளையம் ஹைஸ்கூல், ஆர். எஸ். புரம், கோவை.

ரூ. 5—0—0 கொடுத்த அன்பர்கள் :—

ஸ்ரீமதி எம். எஸ். மீனாட்சி, வடக்கஞ்சேரி, தெற்கு மலபார்; ஸ்ரீமான்கள் கே. ராமசாமி கவுண்டர், மிராசுதார், கன்னிப்பட்டி போஸ்டு, பவானி; ஆர். மௌனசாமி, வைசியாள் தெரு, பாண்டிச்சேரி; ரா. நாகப்பன் நாயுடு, அம்பாரம்பாளையம், பொள்ளாச்சி; திராவிடக் கவிமணி வே. முத்துசாமி அய்யர், எம். ஏ. எல். டி., ரங்கநாதபுரம், திருக்காட்டுப்பள்ளி; பி. ஆர். ராஜகோபாலன் பிரதர்ஸ், (5-5-5) 3-வது மேற்குத் தெரு, புதுக்கோட்டை; டி. எஸ். நாராயணசாமி ஐயர், அட்வகேட், கச்சாலீஸ்வரர் அக்ரஹாரம், ஜி. டி. சென்னை; என். எஸ். கிருஷ்ணமூர்த்தி, (ரதன்) 10, அப்பர்சாமி கோவில் தெரு, மைலாப்பூர், சென்னை; ஜி. பாலகிருஷ்ணன், தரம்பட்டி, நாக்பூர்; ஆர். வெங்கட்ராமன், மானேஜர், நியூ நாராயண லாட்ஜ், செவ்வாய்ப்பேட்டை, சேலம்; பி. எஸ். நாராயண ஐயர், ஆசிரோதயா மில்ஸ், யசவந்தபூர், பங்களூர்; ஸ்ரீமதிகள் ருக்மணி அம்மாள், 'அரவிண்ட்' 11-ஏ, வாரன் ரோட், மைலாப்பூர், சென்னை; அம்புஜம் நாராயணசாமி, பங்களூர்; டி. எஸ். லக்ஷ்மி, பி. ஏ. எல். டி., உபாத்தியாயினி, ஸ்ரீ மீனாட்சி பெண்கள் உயர் நிலைப் பள்ளி, காரைக்குடி.

ரூ. 3—0—0 அளித்த அன்பர்கள் :—

ஸ்ரீமான்கள் வி. எம். எம். சீனியப்பன், கோபிநாயக்கன்பட்டி, விருதுநகர்; வி. எஸ். முத்துகிருஷ்ண நாயக்கர், கோபிநாயக்கன் பட்டி, விருதுநகர்.

ரூ. 2—0—0 வழங்கிய அன்பர்கள் :—

ஸ்ரீமான்கள் எம். வெள்ளைச்சாமி, (2-2-0) ஹவில்தார் கிளார்க், டன்கர்க் ஹாஸ்பிடல் லேன்ஸ், பூனா; என். எஸ். ராமச்சந்திரன், டெலி பிரிண்டிங் ஆப்பரேட்டர், கரக்பூர்; கி. கமலாகரன், பிள்ளையார் கோவில் தெரு, சைதாப்பேட்டை, சென்னை; கே. ராமச்சந்திரன், காசிவிஸ்வநாத கோயில் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை; வி. நாகராஜன், எஸ். எஸ். எல். சி., சீனிவாச ராவ் ஹைஸ்கூல், திருவையாறு; பி. எஸ். நாகநாதன், "கல்கி" ஏஜெண்ட், திருச்செங்கோடு; பி. ஜி. மகாலிங்கம், சேர்மன் தெரு, பொள்ளாச்சி; என். வைத்தியநாதன், ஓரியண்டல் கவர்ன்மெண்ட் லைப் இன்ஷ்யூரன்ஸ், பம்பாய்.

ரூ. 1—0—0 அளித்த நண்பர்கள் :—

ஸ்ரீமான்கள் எஸ். மகாலிங்கம், 'சிவஞான நிலையம்' அம்பத்தூர்; எம். நாகப்பா, ராஜாத் தெரு, கோமுத்தூர்; எஸ். டேவிட், ஸ்டேஷன் மாஸ்டர், கடலூர் ஓ. டி.; ஆர். கிருஷ்ணன், ரங்கைய கவுண்டர் தெரு, கோயமுத்தூர்; ஞானசுந்தரம், ஹரிஜன சேவா சங்கம்; ரத்தினம் முதலியார், நாக்பூர்; கிருஷ்ணசாமி, கச்சேரி தெரு, கோபிச் செட்டிப்பாளையம்; ஆர். கோவிந்தராஜ்,

இவ்வொரு ஜில்லாவிலும் மகாத்மா ஸ்தூபி நிதி வசூலுக்குச் சில அன்பர்களை ஏற்படுத்தியிருப்பதாக முந்தைய இதழ் ஒன்றில் விவரங்கள் தரப்பட்டிருந்தன. பின்வரும் நண்பர்களும் மேற்படி நிதி வசூல் உதவி செய்வதற்கு மனமுவந்து முன்வந்திருக்கிறார்கள்.

1. ஸ்ரீ ராஜா சிதம்பரம் செட்டியார், ஜில்லா போர்டு தலைவர், திருச்சிறுப் பள்ளி; 2. ஸ்ரீ எம். எஸ். பொன்னுசாமி ஐயர், மிராசுதார், மாயவரம்; 3 ஸ்ரீ கந்தசாமி செட்டியார், பஞ்சாயத்து போர்டு தலைவர், எட்டயபுரம், கோவில்பட்டி; 4. ஸ்ரீ வி. எஸ். வெங்கடாச்சாரியார், மிராசுதார், விட்டலபுரம், செய்துங்கநல்லூர் போஸ்டு, திருநெல்வேலி ஜில்லா; 5. ஸ்ரீ எம். ஆர். மேகநாதன் C/o காங்கிரஸ் கமிட்டி, பாளையங்கோட்டை; 6. ஸ்ரீ வி. என். குமாரசாமி, யோகாசன நிபுணர், தண்டையார் பேட்டை, சென்னை; 7. ஸ்ரீ. துரைக்கண்ணு முதலியார், தக்கர் பாபா வித்தியாலயம், தியாகராஜநகர், சென்னை; 8. ஸ்ரீ உமாபதி, உமா பிரிண்டர்ஸ், தாத்தா முத்தையப்பன் தெரு, சென்னை.

மேற்கண்ட நண்பர்களிடம் ரசீது புத்தகங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மகாத்மா ஸ்தூபி நிதிக்குக் காணிக்கை செலுத்தி விட்டு மேற் கூறியவர்களிடம் ரசீது பெற்றுக் கொள்ளலாம்.

## மகாத்மா காந்தி ஸ்தூபி நிதி

| | | | |
|---|---|---|---|
| அகில இந்திய காதி சுதேசிப் பொருட்காட்சி கடைசி நாள் வருமான நன்கொடை | 10,192 | 8 | 0 |
| சென்னை நகர சபையின் முதல் நன்கொடை | 5,000 | 0 | 0 |
| ஸ்ரீ வி. எச். நாக, சேலம் | 2,000 | 0 | 0 |
| கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன், சென்னை | 1,000 | 0 | 0 |
| மெசர்ஸ் வி. செங்கையச் செட்டி அண்டு கம்பெனி, 17-டி. கிடங்குத் தெரு, சென்னை | 500 | 0 | 0 |
| மெஸர்ஸ் காதர் முகம்மது கம்பெனி, 6, பிரான்ஸிஸ் ஜோசப் தெரு, சென்னை | 500 | 0 | 0 |
| ஸ்ரீமதி எம். எஸ். வசந்தகுமாரி, தியாகராஜ நகரம், சென்னை | 250 | 0 | 0 |
| அமிருதலால் ஸ்ரீ எச். காந்தி, தலைவர், காந்தி ஸ்தூபி நிதி, மதுரா, சௌராஷ்டிரம் | 151 | 0 | 0 |
| சாரதா உயர்தர ஆரம்பப் பாடசாலை நிர்வாகிகள், தேமற்கு மாம்பலம், சென்னை | 101 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். சொக்கலிங்கம் பிள்ளை, பண்ணைப்பட்டு, துணிசிரமேடு, நாஞ்சலூர் போஸ்டு, சிதம்பரம் | 101 | 0 | 0 |
| ஸ்ரீ எம். முத்துசுவாமி, எம். ஆர். எஸ். சர்வீஸ், சென்னை | 100 | 0 | 0 |
| ஸ்ரீ வி. குருமூர்த்தி அய்யர், ஆயுர்வேதிக் ஆபீஸ், வரதப்பய்யர் சந்து, தஞ்சாவூர் | 50 | 0 | 0 |
| டாக்டர் ஜி. எஸ். வெங்கடேசன், மலாயா | 50 | 0 | 0 |
| ஸ்ரீ எம். ரத்னகிரி செட்டியார், ஈரோடு | 25 | 0 | 0 |
| ஸ்ரீமதி யோகா மீனாட்சி c/o ஸ்ரீ இ. எஸ். வெங்கடேசுவரன், ஒங்கோல், குண்டூர் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ டி. வி. ஜி. 6, டாங்க் ரோடு, நுங்கம்பாக்கம், சென்னை | 25 | 0 | 0 |
| ஸ்ரீ இ. எஸ். கணபதிசுப்ரமணியம், பி. ஏ., பி. எல்., அட்வோகேட், ஈரோடு | 20 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். ஆர். கிருஷ்ணன், காந்தி நகர், காக்கிநாடா | 21 | 0 | 0 |
| பாரததேவி தேசீய வாலிபர் சங்கம், பெத்து நாயக்கன் பேட்டை, கிருஷ்ணப்ப நாயக்கன் குளம், சென்னை | 13 | 2 | 0 |
| ஸ்ரீ கே. ரகுநாதன், 23, கேசவ பெருமாள் கோவில்தெரு, மைலாப்பூர், சென்னை | 16 | 0 | 0 |

ரூ. 11—0—0 அளித்த அன்பர்கள் :—

ஸ்ரீமான்கள் பி. எஸ். சாத்தப்ப செட்டியார், விராமதி, கீழச் செவல்பட்டி, ராமநாதபுரம் ஜில்லா; எஸ். கிருஷ்ணமூர்த்தி, காரியதரிசி, எலக்டிரிக் சப்ளை கார்ப்பரேஷன் சிப்பந்திகள் சங்கம், காளுடிகாந்தான், ராமநாதபுரம்; நடராஜன், பொக்கிஷதார், குடியரசு விழாக் கமிட்டி, குண்டடம், தாராபுரம் தாலூக்கா.

ரூ. 10—0—0 கொடுத்த நண்பர்கள் :—

ஸ்ரீமான்கள் எம். நமச்சிவாயம் பிள்ளை, மாந்தோப்பு தெரு, தேவகோட்டை; கே. வி. ஸ்ரீனிவாசன், யதார்த்தகாரி, சன்னதித் தெரு, காஞ்சிபுரம்; எஸ். ராமமூர்த்தி, மானேஜர், ஸ்ரீ சோனீஸ்வரர் ஸ்கூல், குத்தாலம், தஞ்சாவூர் ஜில்லா; கே. வி. ராமநாதன், அஸிஸ்டெண்ட் என்ஜினியர், மச்குண்ட், டேஜிபூர்; பெருமாள் பிள்ளை, காரியதரிசி, வக்கீல் குமாஸ்தாக்கள் சங்கம், கடலூர்; ஸ்ரீமதிகள் பி. மீனும்பாள், திருப்பூர்; சகுந்தலா ஜெயராமன், c/o வி. கே. ராமசந்திரன், டெபுடி

# அஸ்திவார விழா

ஒவ்வொரு ஆண்டும் ஏப்ரல் மாதம் 13௳ தியாகிகளின் தினமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. பாரத நாட்டின் தியாகிகளுக்குள்ளே யெல்லாம் மகா தியாகி காந்தி மகாத்மா என்று சொல்ல வேண்டியது இல்லை அல்லவா? உடல் பொருள் ஆவி அனைத்தையும் பாரதத் தாயின் பாத சேவையில் மகாத்மா அர்ப்பணம் செய்தவர். அந்த மகானுடைய ஞாபகச் சின்னமாகச் சென்னைக் கடற்கரையில் எழுப்பப்போகும் ஸ்தூபிக்கு ஏப்ரல்௴ 13௳ அஸ்திவாரம் நாட்டும் விழா நடத்துவது என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அந்தத் தேதிக்குள் ஸ்தூபித் திருப்பணிக்கு வேண்டிய தொகையைத் தென்னாட்டிலுள்ள தேச பக்தர்கள் அளித்துவிடுவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. 'கல்கி' நேயர் ஒவ்வொருவரும் தம் காணிக்கையை அதற்குள் அனுப்பிவிடுமாறு கோருகிறேன்.

* * *

சிறந்த கைங்கரியங்களுக்கு உதவி செய்வது சிலருக்கு ஒரு வழக்கமாகிப் போய் விடுகிறது. அத்தகையவர்களில் ஒருவர் ஸ்ரீ வி. எல். நரசு அவர்கள். பாரதி மண்டபத் திருப்பணிக்கு ஸ்ரீ நரசு இரண்டாயிரம் ரூபாய் நன்கொடை யளித்தது நேயர்களுக்கு நினைவிருக்கலாம். மகாத்மா ஸ்தூபி நிதிக்கும் அவர் அதே தொகையை மனமுவந்து அளித்திருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

* * *

கலைவாணர் திரு என். எஸ். கிருஷ்ணன் அவர்களுடைய காரியங்கள் பல நமக்கு அதிசயமாகவே இருக்கின்றன. பொதுக் காரியங்களில் அவர் காட்டும் ஊக்கம் நம்மைப் பிரமிக்க வைக்கின்றது. நாகர்கோவிலில் தம் சொந்தப் பொறுப்பில் மகாத்மா காந்தி ஸ்தூபி கட்டி முடித்த திரு என். எஸ். கிருஷ்ணன் சென்னையில் கட்டப்போகும் மகாத்மா ஸ்தூபிக்குத் தமது கைங்கரியத்தைச் செய்ய முன் வந்திருக்கிறார். அவருடைய கடிதம் கீழே வெளியிடப் பட்டிருக்கிறது. கடிதத்துடன் அனுப்பிய ஆயிரம் ரூபாய் செக் பாங்கியில் மகாத்மா ஸ்தூபி நிதிக் கணக்கில் சேர்ந்துவிட்டது. இதுமட்டுமன்றி ஏப்ரல் மாதம் முதல் வாரத்தில் மகாத்மா ஸ்தூபி நிதிக்காக உதவி நாடகம் ஒன்று நடத்தித் தரவும் கலைவாணர் திரு என். எஸ். கிருஷ்ணன் முன்வந்திருக்கிறார். நாடகத்தைப் பற்றிய விவரங்கள் பின்னால் தெரிவிக்கப்படும்.

கலை உலகத்தில் புகழ்பெற்ற இன்னொருவர், கலைவாணி ஸ்ரீமதி வஸந்தகுமாரி, மகாத்மா காந்தி ஸ்தூபி நிதிக்கு ரூபாய் இருநூற்றைம்பது நன்கொடை அனுப்பி வைத்திருக்கிறார். மனமார்ந்த மகிழ்ச்சியுடன் அவருக்கு வாழ்த்துக் கூறுகிறேன்.

* * *

காங்கிரஸ் பொருட் காட்சியில் கடைசி தினமாகிய ஜனவரி௴ 31௳ வைபவத்தைப் பற்றி நேயர்கள் தினப் பத்திரிகைகளில் படித்திருப்பார்கள். அன்று ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் சங்கீதக் கச்சேரி நடைபெற்றது. சுமார் நாற்பதினாயிரத்துக்கு அதிகமான ஜனங்கள் ஒரே இடத்தில் அமைதியாக அமர்ந்திருந்து கச்சேரியை உற்சாகமாகக் கேட்டார்கள். அன்று மொத்தம் டிக்கட் விற்பனையில் வசூலான ரூ. 10.192-8-0ஐ மகாத்மா ஸ்தூபி நிதிக்குப் பொருட் காட்சி நிர்வாகிகள் சேர்ப்பித்து விட்டார்கள். இதற்காகப் பொருட் காட்சி நிர்வாகிகளுக்கு நான் நன்றி செலுத்துவது அதிகப் பிரசங்கமாகும். பொருட் காட்சி நிர்வாகிகள், தலைவர் ஸ்ரீ காமராஜ் உள்ளிட்ட பழம் பெரும் தேசபக்தர்கள்; காந்தி பக்தர்கள். அவர்களுக்கு இந்தக் கைங்கரியத்தில் தீவிரமான சிரத்தை இருப்பது இயல்புதானே!

* * *

கோயமுத்தூர் நண்பர்கள் வருகிற மார்ச்சு மாதம் 19௳யன்று ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் கச்சேரி ஏற்படுத்தியிருக்கிறார்கள். இந்தக் கச்சேரி மூலம் வசூலாகிற தொகையை இரண்டு கைங்கரியங்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கத் தீர்மானித்திருக்கிறார்கள். ஒன்று கோயமுத்தூரில் ஆலைப்பிரதேசத்தில் அன்னை கஸ்தூரி பாய் [illegible]ரால் கட்டப் போகும் பிரசவ [illegible]தியசாலை தர்மம். மற்றொன்று மகா[illegible] ஸ்தூபி நிதி. மேற்படி கச்சேரி வைபவத்துக்கு நம் பிரதமர் கனம் குமாரஸ்வாமி ராஜா தலைமை வகிக்கிறார். மகாத்மா பக்தியில் தலை சிறந்த கோயமுத்தூர் ஜில்லாவாசிகள் இந்தச் சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்திக் கொள்வார்கள் என்று நம்புகிறேன். ஸ்ரீ கே. சுப்பிரமணியம் (சுப்ரி) எம்.எல்.ஏ. அவர்களிடம் மற்றத் தகவல்கள் தெரிந்து கொள்ளலாம்.

மகத்தான 2-வது வாரம்




# ரத்னகுமார்

தினசரி 3 காட்சிகள் - மாலை 2-30, 6 & இரவு 9-30 மணி

BALU BROS

முருகன் டாக்கி பிலிம் கம்பெனி மதுரை

ரூ. 2-8-0, 1-14-0 ஒதுப்பு டிக்கட்டுகள் காலை 9 முதல் 12 மணி வரை தினசரி தியேட்டரில் கிடைக்கும்

கசித்துவிட்டது. அப்படியிருக்க, பொறுப்பு வாய்ந்த ஆந்திரத் தலைவர்களில் சிலர் சென்னை நகர் சம்பந்தமாக இன்னும் கிளர்ச்சி செய்து வருவது மிகவும் வருந்தத்தக்கதாகும். அத்தகைய விபரீதமான கிளர்ச்சியை உடனே தடுப்பதற்கான முறைகளைக் காங்கிரஸ் கமிட்டி கைக் கொள்ளாவிடில், ஆந்திரர்களுக்கும் தமிழர்களுக்கும் பகை மூண்டு மாகாணத்தின் அமைதிக்கே ஆபத்து நேரும்.

2. சித்தூர் ஜில்லாவிலும் திருவாங்கூர்—கொச்சி யூனியனிலும் உள்ள தமிழ்ப் பிரதேசங்கள் எல்லாம் தமிழ் நாட்டுடன் சேர்க்கப்பட வேண்டும்.

3. பருவகால மழை பெய்யாததால் ஏற்பட்டுள்ள நிலைமை முற்றிவிடாமலிருக்க சென்னை சர்க்கார் தாமதமின்றித் தகுந்த பரிகார முறைகளைக் கைக் கொள்ள வேண்டும்.

4. விளைச்சல் இல்லாத பிரதேசங்களில் தீர்வை வசூலை வஜா செய்வதுடன், சர்க்காரிடமிருந்தும் நில அடமான பாங்கியிலிருந்தும் விவசாயிகள் பெற்றுள்ள கடன் தொகை வசூலையும் தற்காலிகமாக ஒத்திவைக்க வேண்டும்.

5. ஜெயபுரி காங்கிரஸ் மகாசபை முடிவு செய்ததற்கிணங்க பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களை இந்தியாவுடன் இணைப்பதற்கான முறைகளை உடனே கைக் கொள்ள வேண்டும்.

6. தொழிலாளர், விவசாயிகளின் இன்னல்கள் தீருவதற்கான திட்டங்களை அமுலுக்குக் கொண்டுவர வேண்டும்.

7. காங்கிரசின் விரோதிகள் செய்துவரும் துஷ்பிரசாரத்தை எதிர்ப்பதற்காகவும் ஜனங்களிடையே ஏற்படும் தப்பெண்ணங்களை அகற்றவும் பிரசார இலாகா ஆரம்பிக்க வேண்டும்.

*மேலே குறிப்பிட்ட தீர்மானங்களை அனுசரித்துக் காரியங்கள் நடைபெறுமாயின் தமிழ்நாட்டைச் சூழ்ந்து நிற்கும் பல தொல்லைகள் தீர்ந்து க்ஷேமம் உண்டாகும் என்பது நிச்சயம்.*

* * *

*தமிழ்நாடு அரசியல் மகாநாட்டை ஆரம்பித்து வைத்தபோதும், சென்னையில் நடந்த பொதுக் கூட்டங்களிலும் ஷேக் அப்துல்லா நிகழ்த்திய பிரசங்கங்கள் அவரது பெயருக்கேற்ப சிம்ம கர்ஜனைகளாகவே திகழ்ந்தன.*

*முஸ்லிம் லீக் தலைவர்கள் இந்தியாவைப் பிளந்ததுபோல காஷ்மீரைப் பிளக்கவோ, அல்லது பாகிஸ்தானில் செய்ததைப்போல மதத்தின் பெயரால் படுகொலைகளைச் செய்யவோ காஷ்மீர் முஸ்லிம்கள் எக்காலத்திலும் இடம் கொடுக்க மாட்டார்கள் என்று ஷேக் அப்துல்லா உறுதி கூறினார்.*

"காஷ்மீரிலுள்ள சகல முஸ்லிம்களையும் கொன்றபின்தான் பாகிஸ்தானிகள் அங்குள்ள ஒரு ஹிந்துவுக்கோ அல்லது ஒரு சீக்கியருக்கோ தீங்கு இழைக்க முடியும்."

"காஷ்மீரத்தின் கௌரவத்தைக் காட்டிலும் பண்டித ஜவஹர்லால் நேருவின் கௌரவமே காஷ்மீர் மக்களுக்கு அதிக மேலானது, அதிக அருமையானது."

"தமிழ்நாட்டைச் சேர்ந்த இளம் வீரர்கள் காஷ்மீர் போர்முனையில் தங்களுடைய உதிரத்தைக் கொட்டி காஷ்மீருக்கும் இந்தியாவுக்கும் உள்ள நட்பு என்றென்றும் நிலைத்திருக்கும்படி உரம் பெறச் செய்திருக்கிறார்கள்."

"காஷ்மீரில் நடக்கும் போர் காஷ்மீர் ஜனங்களின் பிறப்புரிமைக்கும் பாகிஸ்தானிகளின் பேராசை உரிமைக்கும் நடக்கும் யுத்தமாகும்."

"எங்களிடையே மதவெறியைத் தூண்டுவதற்காக 1944-ம் ஆண்டில் காயிதே ஆஜம் ஜின்னா காஷ்மீருக்கு வந்தார். அங்கு மூன்று மாதகாலம் தங்கிப் பெருமுயற்சி செய்தார். ஆனால், இறுதியில் அவரது நோக்கம் தோல்வியுற்றது. பாகிஸ்தானைச் சிருஷ்டித்த ஜின்னாவே வெற்றி பெறாத ஒரு காரியத்தில் மற்ற பாகிஸ்தான் தலைவர்களோ, ஐ. நா. சபையினரோ வெற்றிபெறப் போவதில்லை."

*பதினாயிரக் கணக்கான ஹிந்துக்களும் முஸ்லிம்களும் கூடியிருந்த மாபெரும் கூட்டத்தில் ஷேக் அப்துல்லா அவ்வாறு தம்முடைய ஹிருதய உணர்ச்சியைக் கொட்டியதைக் கேட்டு எல்லோருக்கும் மெய் சிலிர்த்திருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.*

*இந்தியா பிளக்கப்பட்டதற்கு அரசியல் சூழ்ச்சிதான் காரணம். மதம் காரணம் என்று பாகிஸ்தானிகள் கூறுவது சுத்த அபத்தம் என்பதை ஷேக் அப்துல்லா எடுத்துக் காட்டினார். மதம் அடிப்படையான காரணமாக இருந்தால் முஸ்லிம்கள் யாவரும் பாகிஸ்தானில் இருக்க வேண்டுமேயன்றி, இந்தியாவில் அவர்களுக்கு இடமேயில்லையென்பதை அடித்துக் கூறினார்.*

*ஆனால், காஷ்மீர் முஸ்லிம்கள் அத்தகைய அரசியல் சூழ்ச்சிக்கு அடிபணிந்துவிட மாட்டார்கள் என்பதைக் காஷ்மீர் சம்பவங்கள் உலகத்துக்கு நிதர்சனமாக நிரூபித்து விட்டன என்று அவர் கர்ஜித்தார்.*

*காஷ்மீர் பிரதம மந்திரியின் இடி முழக்கம், அந்தப் பிரச்னையையொட்டி பலருக்கும் இருக்கக் கூடிய அற்ப சந்தேகத்தையும் தகர்த்ததுடன், தற்போது ஐக்கிய நாடுகள் சபையில் சர் ஜபருல்லாகான் மீண்டும் ஆரம்பித்துள்ள வாய்ப்பந்தலுக்கும் ஆணித்தரமான பதிலாக அமைந்திருக்கிறது.*

# அரசியல் விழாவில் முரசொலி

தமிழ் நாட்டு மக்கள் எந்தத் திருவிழாவினால் பலனை அடைந்தாலும் அடையாவிட்டாலும், சென்னைமா நகரில் உள்ள தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் நடைபெறும் திருவிழாக்களினால் மாத்திரம் அதிகமான பலனை அடையாமல் இருப்பதில்லை.

அங்கு சமீபத்தில் நடந்த சுதேசிப் பொருட்காட்சி விழா மகத்தான வெற்றியுடன் முடிவடைந்தது. அது வெறும் வேடிக்கை விழாவாக இராமல் கல்வி, கலை, கைத்தொழில், சுகாதாரம், பொருளாதாரம் முதலிய மற்றும் பல்வேறு துறைகளிலும் மகாஜனங்களுக்கு அருமையான வழிகாட்டியாக அமைந்தது.

சென்ற வாரம் அங்கு நடைபெற்ற தமிழ் மாகாண அரசியல் மகாநாடு, குடியரசு பெற்றுள்ள ஜனங்களுக்கு அந்தக் குடியரசைத் திறம்பட வகித்து அதன் காரணமாக ஏற்படும் பலனைப் பூரணமாக அனுபவிப்பதற்குற்ற யோசனைகளைக் கூறியிருக்கிறது.

"அரசியலில் மதவெறிக்கும் வகுப்பு வாதத்துக்கும் எள்ளளவும் இடமில்லை. இந்தியா ஹிந்துக்களுக்கு எவ்வளவு சொந்தமோ அவ்வளவு இந்த நாட்டைத் தாயகமாகக் கொண்டுள்ள முஸ்லிம்கள், சீக்கியர்கள், கிறிஸ்துவர்கள், ஆங்கிலோ இந்தியர்கள் முதலிய எல்லோருக்கும் சொந்தம்" என்பதுதான் மகாத்மா காந்தியின் சீரிய அரசியல் தத்துவங்களில் ஒன்று.

அந்தப் புனித தத்துவமே உருவெடுத்தாற் போன்று வாழ்ந்து வரும் காஷ்மீர் பிரதம மந்திரி ஷேக் முகமது அப்துல்லா தமிழ்நாடு அரசியல் மகாநாட்டை ஆரம்பித்து வைத்தார்.

எளிமை, தியாகம், தொண்டு இவற்றினால் உருவான வாழ்க்கைச் சிறப்பு பொருந்திய திருவண்ணாமலை ஸ்ரீ என் அண்ணாமலைப் பிள்ளை அந்த மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார்.

எல்லாவற்றுக்கும் மேலாக, இந்தியாவில் தமிழ் நாட்டின் தனிச் சிறப்புக்கே காரண கர்த்தாவாக விளங்கி வரும் ராஜாஜி மகாநாட்டுக்கு விஜயம் செய்து பிரமுகர்களும் பிரதிநிதிகளும் பதினாயிரக் கணக்கான ஜனங்களும் மிகுந்த உற்சாகமும் நம்பிக்கையும் கொள்ளும்படி செய்தார்.

இவற்றைக் காட்டிலும் மகாநாட்டின் சிறப்புக்கு வேறு என்ன வேண்டும்?

இத்தகைய சூழ்நிலையில் மகாநாடு பல முக்கியமான தீர்மானங்களை நிறைவேற்றி அமோக வெற்றியுடன் முடிந்ததில் ஆச்சரியம் என்ன?

• • •

களங்கமற்ற சிறந்த தவயோகிகளின் நிலையிலும் எப்போதாவது தடுமாற்றம் ஏற்படுவது உண்டு.

சிறைக்கூடத்தில் கடுந்தவம் புரிந்து தியாக அக்னியில் மூழ்கிச் சுதந்திர ஒளியைக் கண்ட பாரத நாட்டு மக்களின் வாழ்க்கையிலும் இப்போது அத்தகைய தடுமாற்றம் ஏற்பட்டிருக்கிறது.

தவக்கோலத்தில் தியாக வாழ்க்கை நடத்தியவர்களில் பலர் பதவி மோகம் கொண்டு போட்டா போட்டி போடுவதைப் பார்க்கிறோம். ஆச்சரியமான ஒற்றுமையுடன் அன்னியரை எதிர்த்து நின்ற வீரர்களில் பலர் ஒற்றுமை குலைந்து தங்களுக்குள்ளேயே சச்சரவிட்டுக் கொண்டு சந்தியில் நிற்பதைக் காண்கிறோம். "சத்தியாக்கிரகத் தீயில் குதித்து சர்வ பரித்தியாகம் செய்யுங்கள்" என்ற காந்தி மகானின் கடினமான கட்டளையைச் சிரமேற்கொண்டு நிறைவேற்றிய சிலர்களில் பலர், "வாரத்தில் ஒருவேளை உணவைக் குறைத்துக் கொள்ளுங்கள்" என்ற கோரிக்கையைக் கண்டு சீறி விழுவதையும் காண்கிறோம்.

இத்தகைய தடுமாற்றத்தினால் நாட்டுக்கு நன்மை விளையாது என்பதையும், காங்கிரஸ்வாதிகளின் தன்னலமற்ற தொண்டும் மந்திரிகளின் மாசற்ற நிர்வாகமுமே சகல இன்னல்களிலிருந்தும் தேசத்தைப் பாதுகாக்க வல்லது என்பதையும் ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை தமது தலைமை உரையில் குறிப்பிட்டதுடன், மற்றும் பல அரிய யோசனைகளையும் கூறினார்.

மகாநாட்டில் முக்கிய தீர்மானங்கள் பல எதிர்ப்பின்றி ஏகமனதாக நிறைவேறியது குறிப்பிடத்தக்கதாகும்.

1. சென்னை நகரில் ஆந்திரர்களுக்கு எவ்வித உரிமையும் இல்லை என்பதை ஜவாஹர்—வல்லபாய்—பட்டாபி கமிட்டி சந்தேகத்துக்கு இடமின்றித் தெளிவாக்கிவிட்டது. அந்த முடிவை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும் அங்கீ

மலர் 9



கல்கி

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 29

# என்ன சேதி?

## தீபங்களின் அர்த்தம்

இந்தியக் குடியரசுத் திட்டத்தின்படி நாடு முழுவதும் நிர்வாக அலுவல்கள் வெகு ஜரூராக ஆரம்பமாகியிருக்கின்றன. அதற்கிணங்க, சென்னையிலுள்ள இரண்டு சட்டசபைகளும் அடங்கிய கூட்டத்தில் கவர்னர் பவாநகர் மகாராஜா பேசியபோது சர்க்காரின் கடமைகளையும், சட்டசபை அங்கத்தினர்களின் பொறுப்புகளையும், பொது ஜனங்களின் உரிமைகளையும் வற்புறுத்தினார். சென்னை மாகாணத்திலுள்ள ஐந்து கோடி மக்களின் விதி சட்டசபை அங்கத்தினர்களுடைய கையில் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது என்பதை அவர்களுக்கு ஞாபகப்படுத்தினார். சென்னை சர்க்கார் கைக்கொண்டுள்ள பல்வேறு அபிவிருத்தித் திட்டங்களைப் பற்றிக் குறிப்பிட்டார். குடியரசு விழாவின்போது இருளை அகற்றிய எண்ணிக்கையற்ற தீபங்களின் அர்த்தம் என்ன என்பதை விளக்கிக் கூறினார். மக்களின் வாழ்க்கையை இருள்போன்று கவிந்து கொண்டிருக்கும் வறுமை, நோய், அறியாமை முதலியன மறைந்து சுபிட்ச ஒளி உதயமானாலன்றி மேற்படி தீபாலங்காரங்கள் எல்லாம் வெறும் வெளிப் பகட்டாக முடியும் என்றார்.

சென்னை மாகாண சர்க்கார் கைக்கொண்டு வரும் நீண்டகாலத் திட்டங்கள் ஒருபுறமிருக்க, அவர்கள் உடனடியாக கவனித்து நிறைவேற்ற வேண்டிய பிரச்னைகள் பல இருக்கின்றன. அவற்றுள் முதன்மையானது உணவு நெருக்கடி. பருவ காலத்தின் மீது பாரத்தைப் போட்டோ அல்லது வேறு காரணங்களைக் கூறியோ சர்க்கார் அந்த நெருக்கடியைச் சமாளித்துவிட முடியாது. உடனடியாக ஜனங்களைப் பாதிக்கும் அந்தப் பிரச்னையைப் பத்து வருஷம் அல்லது இருபது வருஷத் திட்டங்கள் தீர்க்கலாம் என்று கூறுவது அர்த்தமற்ற காரியம். எனவே, சர்க்கார் அவ்விஷயமாகச் சிறிதும் தாமதமின்றித் தகுந்த முறைகளைக் கைக்கொண்டு பரிகாரம் அளிக்கவேண்டும். அடுத்த படியாக விலைவாசிகள் விழுந்து வாழ்க்கைச் செலவு குறைவதற்கான வழி வகைகளைத் தேடவேண்டும். இந்த இரண்டு காரியங்களில் வெற்றி பெற்றுவிட்டால் சர்க்கார் மீது ஜனங்களுக்கு அபரிமிதமான நம்பிக்கை ஏற்பட்டுவிடும். அடுத்த பொதுத் தேர்தலுக்குள் இவ்விஷயத்தில் சர்க்கார் கவனம் செலுத்தி வெற்றியை நாடவேண்டும்.

## விட்டு விடுங்கள்

கவர்னரின் பிரசங்கத்தை யொட்டி அஸெம்பிளியில் நடந்த விவாதத்தில், மது விலக்குத் திட்டத்தை அவசரப்பட்டு அமுலுக்குக் கொண்டு வந்ததால்தான் சென்னை சர்க்காரின் நிதி நிலைமை மோசமாகியது என்று சில அங்கத்தினர்கள் கூறினார்கள். இந்த வாதம் துருப்பிடித்துப் போன பழைய வாதமாகும். மது விலக்குத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்ததன் மூலம் சென்னைக்குப் புகழும் பெருமையும் ஏற்பட்டிருக்கிறது. இல்லாவிடில் காங்கிரஸ் திட்டத்தின் முக்கிய அம்சமான மது விலக்கை காங்கிரஸ் சர்க்கார் அலட்சியம் செய்து விட்டார்கள் என்று காங்கிரஸின் விரோதிகள் இடைவிடாது கூக்குரலிடுவார்கள்.

சென்னை சர்க்கார் இழந்த கலால் வருமானம் விற்பனை வரியின் மூலம் ஈடு செய்யப்பட்டு விட்டது. மது விலக்கு அமுலுக்கு வந்து விட்டபடியால் இனி அதை வெற்றிகரமாகச் செய்வதற்கான யோசனைகளைத்தான் அங்கத்தினர்கள் கூறவேண்டுமேயன்றி, சர்க்காரைக் கண்டிப்பதற்காக அதை ஒரு கருவியாக உபயோகிப்பது நியாயம் ஆகாது. ஆகையால் அத்தகைய அர்த்தமற்ற வாதத்தைத் திரும்பத் திரும்ப எழுப்பிக் கொண்

டிருப்பதை விட்டுவிட்டு, நிதி நிலைமை சீர்படுவதற்கான தகுந்த யோசனைகளைக் கூறுவதுதான் நேர்மையான, உபயோக மான காரியமாக இருக்கும்.

## இது என்ன மர்மம்?

தென்னிந்தியாவிலுள்ள பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களில் சர்வஜன வாக்கு எடுக்கும் தேதியை பிரஞ்சு அதிகாரிகள் என்றைக்காவது நிர்ணயித்துத்தான் தீர வேண்டும் என்ற நம்பிக்கை இது வரையில் இருந்து வந்தது. ஆனால், அந்த நம்பிக்கைக்கும் இனி இடமில்லை என்று தெரிகிறது. பிரான்ஸ் பார்லிமெண்டில் பிரஞ்சு இந்திய அங்கத்தினராக இருக்கும் ஸ்ரீ லாம்பர்ட் சரவணே சமீபத்தில் புதுச்சேரிக்குச் செல்லும் வழியில் சென்னையிலே சில நிமிஷங்கள் தங்கினார். அப்போது அவர் கூறிய விஷயங்கள் முன்னுக்குப் பின் முரணாக இருந்தன. "பிரஞ்சு இந்தியப் பிரச்னை விஷயமாக இந்திய சர்க்காருடன் ஒரு சமரசமான ஒப்பந்தத்துக்கு வர பிரஞ்சு சர்க்கார் துடித்துக் கொண்டிருக்கிறார்கள்" என்று கூறிய ஸ்ரீ சரவணே அதே மூச்சில், "சர்வஜன வாக்கு எடுக்காமலே ஒரு சமரசத்துக்கு வரவேண்டும் என்பது தான் பிரஞ்சு சர்க்காரின் விருப்பம்" என்று ஒரு போடு போட்டார். அத்துடன் அவர் நிற்கவில்லை. "பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களில் தங்களுடைய ஆட்சி அதிகாரத்தை நீடிக்க பிரஞ்சு சர்க்கார் விரும்பவில்லை என்பது என்னுடைய உறுதியான நம்பிக்கை" என்றும் மர்மமாகக் குறிப்பிட்டார்.

இந்திய சர்க்காருடன் சமரசம் செய்து கொள்ளத் துடித்துக் கொண்டிருப்பதாகக் கூறப்படும் பிரஞ்சு சர்க்கார் சர்வஜன வாக்கு எடுக்காமல் காலத்தைக் கடத்தும் தகிடுதத்த வேலையில் முனைந்திருப்பதேன்? பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களில் ஆட்சி அதிகாரத்தை நீடிக்க விரும்பாத பிரஞ்சு சர்க்கார், பிரிட்டிஷாரைப்போல் அந்த அதிகாரத்தை இந்தியர்களிடம் ஒப்புவித்து விட்டு வெளியேறி விடவேண்டும் அல்லவா? அவ்வாறு வெளியேறத் தீர்மானித்து விட்டார்களா? அப்படியாயின் அவ்விஷயமாக இன்னும் பலவித சூழ்ச்சிகளைக் கையாண்டு இழுத்தடிப்பதின் மர்மம் என்ன? ஸ்ரீ சரவணேயின் கூற்று மேற்படி கேள்விகளுக்குச் சரியான பதில் அளிப்பதாக இல்லை; அதற்கு மாறாக, தற்போதைய நெருக்கடியான நிலைமையை மேற்கொண்டு குழப்புவதாக இருக்கிறது.

## தமிழ்நாட்டில் காஷ்மீர் சிங்கம்!



'காஷ்மீர் சிம்மம்' என்று பிரசித்தி பெற்ற காஷ்மீர் பிரதம மந்திரி ஷேக் அப்துல்லா சென்னைக்கு விஜயம் செய்து சென்னை மக்கள் மனமகிழும்படி பல கர்ஜனைகள் புரிந்தார்.

# கல்கி

## பொருளடக்கம்


மலர் 9 இதழ் 29 | பிப்ரவரி 19 | விரோதி ௵ மாசி 8உ




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மாடர்ன் தியேட்டர்ஸ்

# பொன்முடி



# MORTON SWEETS



இன்னும் அதிகமான

## ஆர்வத்திற்கு



## C. & E. MORTON (INDIA) LTD.

குளுகோஸ், மற்றும் இதர புஷ்டியான பொருட்களிலிருந்து

கிரீம், டாப்பிகள், பழரஸ மிட்டாய்கள், இனிப்பான பார்லி சர்க்கரைகள், பெப்பர்மிண்ட் முதலியவைகளைத் தயாரிப்போர்

•

தென் இந்தியாவுக்கு சோல் ஏஜண்டுகள் :

**மெஸர்ஸ். சௌத் இந்தியா கார்ப்பொரேஷன் (மதராஸ்) லிமிடெட்**

**20, செம்புதாஸ் தெரு — மதராஸ் - 1**

MORTON'S MAKE LIFE SWEETER MORTON'S MAKE LIFE SWEETER MORTON'S MAKE LIFE SWEETER MORTON'S MAKE LIFE SWEETER

# தினம் காலையில் எண்ணெய் தேய்த்துக் குளிப்பதைப் போன்ற

# சுகத்தை பூர்த்தியாக அனுபவியுங்கள்!

எண்ணெய் தேய்த்து குளித்தானபிறகு உங்களுக்கு சுகமாகவும் குளுமையாகவும் தென்பாகவும் இருப்பதன் காரணம், அது சருமத்தினுள் புகுந்து வேலை செய்து ஓர் இன்புணர்ச்சியூட்டுகிறது. கேரளா டாய்லட் ஸோப்புகளும் அத்தகைய பயனளிக்கின்றன. அவைகள் சுத்தமானவை; கேவலம் எடை பருமன் நிரப்ப வேண்டி மாற்றுப்பொருள்கள் யாதொன்றும் அவையில் சேர்க்கப்படுகிறதில்லை. இந்த ஸோப்புகளின் செழிப்பான நுரையை தணுத்த ஜலத்திலுங் கூட எளிதிற் கழுவலாம்.




# கேரளா ஸோப்

சுத்தமான எண்ணெயே மூலப்பொருள்

## ஸாண்டல்வுட்

இதில் கலந்துள்ள சந்தனம், கஸ்கஸ் தைலங்களின் திவ்விய பரிமளம் ஸ்நானத்திற்குப் பிறகு வெகுநேரம் நீடித்திருக்கிறது.

தயாரிப்பாளர்கள் —

**கேரளா ஸோப் இன்ஸ்டிட்யூட்**
**கள்ளிக்கோட்டை**

டிபார்ட்மெண்ட் ஆப் இன்டஸ்ட்ரீஸ் அண்டு காமெர்ஸ்

**கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்**

ASTA'S

மார்ச் 1உ

வெளி வருகிறது

T. R. மஹாலிங்கம்

M.V. ராஜம்மா.....

N.S. கிருஷ்ணன்..

T.A. மதுரம்.....

V.N. ஜானகி......

லலிதா · பத்மினி.

S.V. சகஸ்ரநாமம்

R. பாலசுப்ரமணியம்

நடிக்கும்





# பாலாஜியின் லைலா மஜ்னு

## தனித்தமிழ்ப்படம்

டைரக்ஷன்: F. நாகூர்

ஸ்டூடியோ: நியூடோன்



# கொலம்பியா புதிய வெளியீடு



ஏவி எம் புரொடக்ஷன்ஸ்

# வாழ்க்கை

டாக்கிப் பாட்டுகள்

GE 6687 { அன்னையே / ஏது ஏழைக்கு இன்பம்

GE 6689 { செந்தமிழும் சுவையும் / மனமேவும்

முந்திய வெளியீடுகள்

GE.6685

GE 6686

GE.6688

**ஸரஸ்வதி ஸ்டோர்ஸ்**
மதறாஸ்.2

